# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 18 Issue 1 August 2023 Rs.25
ஆண்டு 18 இதழ் 1 ஆகஸ்ட் 2023 ரூ.25












**கே. ஜெயராம்: ஒரு உன்னதக் கலைஞனின் பயணம்**

ஆனந்த்

**நாடு எதை நோக்கி சென்று கொண்டிருக்கிறது?**

பிரபு திலக்

**தமிழ் சினிமாவில் பைத்தியங்கள்**

சஃபி

ஆண்டு 18 இதழ் 1

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஆகஸ்ட்-2023 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## ஆசிரியர் பக்கம்

# நாடு எதை நோக்கி சென்று கொண்டிருக்கிறது?

**பிரபு திலக்**

மணிப்பூரில் நூறு பேருக்கும் மேற்பட்டவர்கள் கொண்ட ஒரு கும்பல் இரண்டு பெண்களை நிர்வாணப்படுத்தி ஊர்வலமாக அழைத்துச் செல்லும் பதைபதைக்க வைக்கும் சம்பவத்தின் சாட்சியான வீடியோ வெளியாகி நம்மை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியுள்ளது. அந்தப் பெண்கள் அந்த கும்பலால் கூட்டுப் பாலியல் பலாத்காரத்துக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர் என்ற கொடும் தகவலும் வெளியாகியுள்ளது. நாடு எதை நோக்கி சென்று கொண்டிருக்கிறது?

மே 3ஆம் தேதி முதல் மணிப்பூரில் இரு சமூகங்களுக்கு இடையே வன்முறை வெடித்தது. இதுவரை ஓயாத இந்த வன்முறையில் 160 பேர் பலியாகியுள்ளனர்; 60,000 பேர் வீடற்றவர்களாக ஆக்கப்பட்டுள்ளனர்; 5000 தீவைப்பு சம்பவங்கள் நடந்துள்ளன என்று மாநில அரசின் அதிகாரபூர்வ தகவல்கள் தெரிவிக்கின்றன. ஆனால், பலியும் பாதிப்பும் இன்னும் அதிகமாகவே இருக்கக்கூடும் என்றே அங்கே இருந்து வரும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

வன்முறை தீவிரமான மே 3-க்கு அடுத்த நாளே, குக்கி சமூகத்தைச் சேர்ந்த இந்த பெண்கள் மெய்தேய் இனத்தவர் அதிகமாக வாழும் தௌபல் மாவட்டத்தில் நிர்வாணமாக்கி பாலியல் வன்கொடுமை செய்யப்பட்டு இவ்வாறு ஊர்வலமாக அழைத்து வரப்படும் அவலச் சம்பவம் நடந்துள்ளது. ஆனால், வெளியே வர இத்தனை நாட்கள் ஆகியுள்ளது, எந்தளவு அரசு ஆதரவுடன் இந்த வன்முறைகள் அறங்கேறியுள்ளன என்பதையே வெளிச்சமிட்டு காட்டுகிறது. பாதிக்கப்பட்ட பெண்கள் தங்களை வன்முறையாளர்களிடம் காவல்துறையினரே ஒப்படைத்து சென்றுள்ளதாக கூறியுள்ளதும் குறிப்பிடத்தக்கது.



வீடியோவில் இரண்டு பெண்கள் மட்டுமே காணப்படும் நிலையில், அந்த கும்பல் 50 வயது பெண் ஒருவரையும் ஆடையை களைய வற்புறுத்தியதாக இந்த பெண்கள் தெரிவித்துள்ளனர். காவல்துறையின் முதல் தகவல் அறிக்கை தகவல்களின்படி, 'மே 3ஆம் தேதி 800 முதல் 1000 பேர் வரை உள்ள கும்பல் நவீன ஆயுதங்களுடன் அவர்கள் கிராமத்தில் தாக்குதல் நடத்தியுள்ளனர். வீடுகளில் கொள்ளையடித்ததுடன் தீ வைத்துள்ளனர். இந்நிலையில், பாதிக்கப்பட்ட பெண்கள் தந்தை, சகோதரருடன் அருகேயிருந்த காடுகளை நோக்கி ஓடியிருக்கின்றனர். அப்போது இந்த பெண்களையும் தந்தை மற்றும் சகோதரனையும் காவல்துறையினர் காப்பாற்றினர். பின்னர் இவர்களை காவல் நிலையத்திற்கு அழைத்துச் செல்ல முயன்ற போது காவல் நிலையத்திற்கு இரண்டு கிலோமீட்டர் முன்பு, கும்பல் அவர்களைத் தடுத்திருக்கிறது. தொடர்ந்து அந்த கும்பல் இவர்களை காவல்துறையினரிடம் இருந்து வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றிருக்கின்றனர். இளம் பெண்ணின் தந்தை சம்பவ இடத்திலேயே கொல்லப்பட்டார். மூன்று



பெண்களும் கூட்டத்தின் முன் நிர்வாணமாக நடக்க வற்புறுத்தப்பட்டனர். ஒரு இளம் பெண் பொது இடத்தில் கூட்டு பாலியல் வன்கொடுமை செய்யப்பட்டார். பெண்ணின் 19 வயது சகோதரர் அவரை காப்பாற்ற முயன்றபோது, அவரும் கொல்லப்பட்டார்.'

ஆனால், இந்த முதல் தகவல் அறிக்கைக்கு மாறாக, காவல்துறையினரே தங்களை வன்முறைக் கும்பலிடம் ஒப்படைத்து சென்றதாக பாதிக்கப்பட்ட பெண்கள் ஊடகங்களிடம் தெரிவித்துள்ளனர். மேலும், வீடியோவில் பதிவாகியுள்ள சம்பவம் காவல்நிலையத்தில் இருந்து 2 கிமீ தூரத்திலேயே நடந்துள்ளது. இருப்பினும், இந்த சம்பவம் தொடர்பான முதல் தகவல் அறிக்கை, 14 நாட்களுக்கு பின்னர் மே 18ஆம் தேதி தான் காங்போக்பி மாவட்டத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. வீடியோ வெளியாகி உச்ச நீதிமன்றம் கண்டனம் தெரிவித்த பின்னர்தான், 77 நாட்களுக்குப் பின்னர் விசாரணை தொடங்கியுள்ளது. இது தொடர்பாக கேள்வி எழுப்பி நாடாளுமன்றத்தை எதிர்கட்சிகள் முடக்கிய பின்னர், அந்த கும்பலில் ஐந்து பேரை மட்டும் காவல்துறை கைது செய்துள்ளது.

இந்த சம்பவத்தில் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்ட பெண் 28 ஆண்டுகள் ராணுவத்தில் பணிபுரிந்த வீரரின் மனைவி என்பதும், ராணுவ வீரர்களை முன்னிறுத்தி தேசபக்தியைப் பற்றிப் பேசுபவர்கள் தான் இந்த கொடூரத்தை செய்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்தியாவின் வடகிழக்கில் மியான்மர் எல்லையை ஒட்டி அமைந்துள்ள இயற்கை எழில் சூழ்ந்த அழகான மாநிலம் மணிப்பூர். நான்கு பக்கம் மலை, நடுவே ஒரு தட்டு போல் பள்ளத்தாக்கு. மிக சின்ன மாநிலம். தனி மாநிலமாக 21.1.1972இல் உதயமானது. மொத்த மக்கள் தொகையே 28 லட்சம்தான். இதில் பெரும்பான்மையினர் மெய்தேய் மற்றும் பழங்குடி யினரான குக்கி, நாகா ஆகிய மூன்று சமூகங்களைச் சேர்ந்தவர்கள். குக்கி, நாகா தவிர 33 பழங்குடி சமூகங்களும் மணிப்பூரில் வசிக்கின்றனர்.

2011 மக்கள் தொகை கணக்குப்படி மணிப்பூரில் இந்துக்கள் 41.39%, கிறித்துவர் 41.29% இசுலாமியர் 8.40%, சீக்கியர் 0.05% வசிக்கிறார்கள். மணிப்பூரின் தலைநகரான இம்பாலை ஒட்டிய சமவெளிப் பகுதிகளில் மெய்தேய் இன மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் மொத்த மக்கள் தொகையில் 53%. இவர்களில் பெரும்பாலனவர்கள் இந்துகள்.

குக்கி, நாகா பழங்குடி மக்களைக் காட்டிலும் வளமாக உள்ள மெய்தேய் இன மக்களே மணிப்பூர் மாநில ஆட்சி அதிகாரத்திலும் ஆதிக்கம் செலுத்துவோராக உள்ளனர். மணிப்பூர் மாநிலத்தின் சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 60, இதில் மெய்தேய் இனத்தைச் சார்ந்தவர்கள் 40 பேர். இதுவரையான 12 முதல்வர்களில் 10 பேர் மெய்தேய் இனத்தவர்கள்தான். 1992 மண்டல் பரிந்துரைக்கு வந்த பிறகு இவர்கள் இதர பிற்படுத்தப்பட்டவர்கள் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

மணிப்பூர் மாநிலத்தின் மலைப் பகுதிகளில் குக்கி,

நாகா உட்பட 35 வகையான மலைவாழ் பழங்குடியினர் வாழ்ந்து வருகின்றனர். இதில் பெரும்பான்மையினர் குக்கி, நாகா இனத்தவர்கள்தான். இவர்கள் மலைகளிலும் காடுகளிலும் வாழ்ந்து வருகின்றனர். மணிப்பூர் மக்கள் தொகையில் இவர்கள் 40.88%. இவர்களில் பெரும்பான்மையினர் கிறித்தவர்கள். குக்கி, நாகா உள்ளிட்ட பிற பழங்குடியின மக்கள் மலைப் பகுதிகளில் வசிக்கின்றனர். மலைவாழ் பழங்குடியினருக்கான (ST) பிரிவில் இவர்களுக்கு 31% இடஒதுக்கீடு அளிக்கப்படுகின்றது.

மணிப்பூரில் 90% மலை, 10% பள்ளத்தாக்கு பகுதிகள். மெய்தேய்கள் மக்கள்தொகையில் அதிகமாக இருந்தாலும் 10% பள்ளதாக்கு நிலப்பரப்பில்தான் வாழ்கின்றனர். மீதமுள்ள 90% மலைப் பகுதிகளில் நாகாக்கள், குக்கிகள் மற்றும் பிற பழங்குடியினர் வசிக்கின்றனர். மணிப்பூரில் உள்ள 16 மாவட்டங்களில் ஐந்துதான் பள்ளத்தாக்கில் இருக்கிறது, 11 மாவட்டங்கள் மலைப்பகுதிகளில் இருக்கின்றன.

மணிப்பூரில் பழங்குடி பாதுகாப்பு சட்டம் இருப்பதால் பள்ளத்தாக்கு பகுதிகளில் வசிக்கும் மெய்தேய் சமூகத்து மக்கள் மலைப்பகுதிகளில் நிலம் வாங்க இயலாது. அதற்கு அவர்கள் உள்ளூர் மக்கள் அனுமதி பெற வேண்டும். எனவே, மெய்தேய் சமூகத்தின் நீண்ட நாள் கோரிக்கை தங்களை பழங்குடியினரின் பட்டியலினத்தில் சேர்க்க வேண்டுமென்பது.

ஆனால், அவர்களை பழங்குடியினப் பட்டியலில் சேர்க்கக் கூடாது என்பது மலைவாழ் பழங்குடி சமூகத்தினரின் கோரிக்கை. மெய்தேயர்களும் பழங்குடி அந்தஸ்தைப் பெற்றால், தங்களுக்கான வேலை வாய்ப்புகள் குறைந்துவிடும்; மேலும், மலைகளில் கூட மெய்தேய்கள் நிலம் வாங்கத் தொடங்குவார்கள். அத்தகைய சூழ்நிலையில், தாங்கள் மேலும் ஓரங்கட்டப்படுவோம் என்று பழங்குடியினர் நினைக்கின்றனர். பல ஆண்டுகளாக இது தொடர்பான சிறு சிறு சச்சரவுகளுடன் இரு சமூகத்தினரும் வாழ்ந்துக் கொண்டிருந்தனர்.

ஆனாலும், மணிப்பூரில் இதற்கு முன் இதுபோல் வன்முறைகள் நடந்ததற்கான எந்த வித வரலாறும் இல்லை. மலையடிவார கிராமங்களில் இருந்து மெய்தேய் இன மக்கள் மலைப்பகுதிக்குச் செல்வதும் மலைப்பகுதிகளில் இருந்து குக்கி இன மக்கள் சமவெளிகளுக்குச் செல்வதும் தங்குதடையின்றி இத்தனை ஆண்டுகளாக நடந்து வந்துள்ளன. உள்ளூரில் செயல்படும் சிறு சேமிப்புத் திட்டங்களில் இருதரப்பினரும் பல நேரங்களில் ஒன்றாக இணைந்து முதலீடு செய்துள்ளார்கள்.

அப்படியானால் எங்கே பிரச்சினை தொடங்கியது? எப்படி எதிரிகளானார்கள்? ஒரு அழகான பகுதி எரிக்கப்பட்ட வீடுகள், வாகனங்கள், குப்பைகளால் சூழப்பட்ட பகுதியாக எங்ஙனம் மாறியது?

நாடு முழுவதும் மக்களை இனரீதியாகவும் மதரீதியாகவும் பிரித்து மோதவிட்டு அதன்மூலம் அரசியல் ஆதாயம் பெற விரும்பும் ஒரு தரப்பினரின் பிரித்தாளும் சூழ்ச்சிக்கு மணிப்பூர் மக்களும் பலியாகி இருக்கின்றனர் என்பதுதான் உண்மை. சாதிய வன்முறையில் வழிபாட்டுத் தலங்களும் இலக்காகியுள்ளது குறிப்பிடத்தக்கது. ஜூன் மாதம் முதல் வாரத்தில் வெளியான தகவல்களின்படி மட்டும் 250 கிறிஸ்தவ தேவாலயங்கள் எரிக்கப்பட்டுள்ளன.

மாநில அரசோ மத்திய அரசோ வன்முறையை முடிவுக்கு கொண்டு வருவதில் உறுதியான நடவடிக்கை எடுக்காததே மூன்று மாதங்களாக தொடர்ந்து வன்முறை நீடித்து வருவதற்கு காரணம் என்ற எதிர்கட்சிகளின் குற்றச்சாட்டை மறுக்க முடியாது. பிரதமர் தனது மௌனத்தைக் கலைக்க, நாட்டின் கவனம் மணிப்பூர் நோக்கி திரும்ப இரு பெண்கள் நிர்வாணமாக அழைத்துச் செல்லப்படும் வீடியோ வெளியாக வேண்டியதிருந்திருக்கிறது. அதுவும், உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதி, “இது முற்றிலும் ஏற்றுக்கொள்ள முடியாதது. இச்சம்பவம் மிகவும் கவலையளிக்கிறது. இது அரசியலமைப்பு மற்றும் மனித உரிமைகளை மீறும் செயலாகும். இதுபோன்ற சம்பவங்கள் மீண்டும் நடக்காமல் இருக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது என்பதை அரசு தெரிவிக்க வேண்டும்” என்று உறுதியாக தெரிவித்த பின்னரே நடவடிக்கைகள் முடக்கிவிடப்பட்டுள்ளன.

நாடு எதை நோக்கி சென்றுகொண்டிருக்கிறது என்ற அச்சத்தை மணிப்பூர் ஏற்படுத்தியுள்ளது. காற்றை விதைத்தால் சூறாவளியைத்தான் அறுவடை செய்ய வேண்டி வரும் என்கிறது ஒரு ஆங்கிலப் பழமொழி. மத வெறுப்பை விதைத்தால் மோசமான விளைவுகள்தான் ஏற்படும் என்பதற்கும் அதில் பலியாவது அப்பாவி மக்கள்தாம் என்பதற்கும் மணிப்பூர் புதிய சான்று.

மணிப்பூரில் பழங்குடியினர் மட்டுமல்ல பெரும்பான்மையினரான மெய்தேய்களும் பாதிக்கப்பட்டுள்ளனர். இந்நிலை மேலும் வளர்க்கப்படாமல் முடிவுக்கு கொண்டுவரப்பட வேண்டும். இரு பிரிவினர் இடையே இனக்கமான சூழ்நிலை உருவாக்கப்பட்ட வேண்டும். அப்போதுதான் சிறுபான்மையினர் மட்டுமல்ல பெரும்பான்மையினரும் அமைதியாக வாழமுடியும் என்பதை அனைவரும் உணர வேண்டும்.

மற்ற மாநிலத்தவர்களுக்கும் மணிப்பூர் ஒரு பாடம். ●

**கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின் பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..**

# எழுத்தில் ஆண் - பெண் பேதம் உண்டா?

**க்ருஷாங்கினி**

**ஓவியம்: கிஷோர் ஷிகரே**

எழுத்தில், ஆண் - பெண் பேதம் உண்டா? உண்டென்றால் எவ்விதம்? உணர்வுகள் அனைவருக்கும் பொதுதானே, நவரசம்தானே; அதில் மாறுபாடு எப்படி? பெண்ணியம், பெண் பார்வை போன்றவை பெண்ணால் மட்டுமே எழுத முடிந்த ஒன்றா? படைப்பாளியின் பெயர் நீக்கிவிட்டால், அதைப் பால் சார்ந்து பார்க்க இயலுமா?

எல்லாக் கேள்விகளுக்கும் ஆம் என்றும், இல்லை என்றும் ஒரு சேர பதில் தரவேண்டிய நிலையில் தான் நான் தள்ளப்பட்டிருக்கிறேன்.

உணர்வுகள் அனைவருக்கும் பொது. என்றாலும் கூட எந்த உணர்ச்சியால் எந்த உந்துதல் ஏற்படுகிறது? உணர்வுகளை முழுமையாக வெளிப்படுத்தும் திடமும் புரிதலும் கொண்டவளாகப் பெண் இருக்கிறாளா? இருக்க முடிகிறதா?

எல்லாத் துறைகளும் போலவே எழுத்திலும் பெண் தனது மன உணர்வுகளை வெளியிட ஆரம்பித்து பல காலம் ஆயிற்று. ஆனால், எண்ணிக்கையின் அடிப்படையிலும் அதை எடுத்து வெளிச்சத்திற்குக் கொண்டு சேர்ப்பதிலும் எப்போதுமே குறைவாகத்தான் உள்ளனர். வேதகாலம், சங்க காலம் தொட்டு நூற்றுக்கணக்கான ஆண் கவிஞர்களின் மத்தியில் ஒரு சில பெண்களைத்தான் காண முடிகிறது. அதிலும், உணர்ச்சிகளின் வெளிப்பாடு யார் சார்ந்து, யாரின் மீது ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளது என்று பார்த்தால், ஆணின் நிழலாகத்தான் பெண் என்பதே புரிய வருகிறது.



ஒரு ஆணின் வாழ்க்கையில் அரசியல், கலை, கல்வி, சொந்தம், உறவு, புற வாழ்க்கை என்று எதுவுமே திருமணத்தினால் அழிந்துபட்டது என்றோ, மாறுபட்டது என்றோ சொல்ல முடியாது. ஆனால், ஒரு பெண் குழந்தையாய்ப் பிறந்ததும் அவள் மண வாழ்க்கையை நோக்கியே அவள் சார்ந்தவர்களின் பார்வை வகுக்கப்படுகிறது. திருமணம், எதிர்காலம் என்பது கருத்தில் கொள்ளப்பட்டே கல்வி, உடை ஆரம்பித்து எல்லாவற்றையும் அவளுக்கு அளிக்கின்றனர், பெற்றோர். திருமணத்தை நடத்தியதும் அப்பெண்ணாகிய சட்டி கணவனைச் சுடட்டும் என்பதான நீண்ட பெருமூச்சுடன் நிகழ்த்தப்படுகிற பந்தங்கள் தான் பெண்ணின் நிரந்தர சொந்தம் என்று உருவேற்றப்படுகிறது. எனவே, அவளின் வாழ்க்கை எப்பொழுதுமே நிழலில் வளரும் செடியாக, சோகையாக வெளிறியுள்ளது.

எந்த ஆணுக்காவது திருமண வாழ்க்கையால் கலை ஸ்தம்பித்துப் போனதா என்று உதாரணங்கள் தேடினால் கிடைக்காது. “எனது இயலபு வாழ்க்கை கெடாமல் எனது குடும்பப் பொறுப்பை என் மனைவி மிக நேர்த்தியாக கவனிக்கிறாள். எனது குழந்தைகள் என்ன படிக்கிறார்கள் என்பது கூட நான் அறியேன்” என்று ஆண் உரக்க சொல்லிக்கொள்வதை பார்க்க முடியும். ஆனால், எல்லாப் பெண்களுக்கும் பிடுங்கி நடும் மறு வாழ்வாகத்தான் திருமண வாழ்க்கை ஆகிறது. அவள் எழுத்து தொடர்வதும் தடைபடுவதும் ஆணின் கைகளில்தான் உள்ளது. எனவே, பெண்ணிடமிருந்து வரு, எந்தக் கலையையும்

இரண்டாக பிரிக்க வேண்டியுள்ளது. திருமணத்திற்கு முன், திருமணத்திற்குப் பின்...

நமது நாட்டில் மொத்த மக்கள் தொகையில் எழுத்தறிவு பெற்றவர்கள் மிகக் குறைவே. அதிலும் பெண்கள் எழுத்தறிவு பெற்றவர்களாக இருப்பது இன்னமும் குறைவு. அவர்களின் பாடம் தொடர்புபடாமல் கதை, கவிதை என்று தேடிப் படிப்பதும் அவற்றில் தானும் பங்கு பெறுவதும், ஒரு படைப்பாளியாவதும் மிக மிகக் குறைவான சதவீதம்தான். அந்த ஒருசில பெண்களுக்கும் முன்னோடியாக எதிர்வரிசையில் வழிகாட்டுபவர்கள் ஆண்களே. அவர்களது சிந்தனை, அவர்களின் நடை, அவர்களது தளமென்பதாகத்தான் பல பெண்கள் பின் தொடர்கின்றனர்.

ஒரு ஆணின் எழுத்து புற உலகைச் சார்ந்ததாகவே உள்ளது. அதை அவர்களின் அறிவின் விலாசமாக தெரிவிக்கவும் அங்கீகரிக்கவும் முற்படும் மக்கள், ஒரு பெண்ணின் எழுத்தை அவள் அகம் சார்ந்ததாகவே பார்க்கிறார்கள். எனவே, தான் ஒளிவு மறைவின்றி எழுத பெண்ணின் பேனா மிகவும் யோசிக்கிறது. உடலுறவு,அரசியல்,பொருளாதாரம்,உலகமயமாக்கல், இசங்கள் என அனைத்தும் ஆண் சார்ந்ததாகவும், பிரசவ வலி,தீட்டு,வரதட்சணைக் கொடுமை,தனிமை போன்றவை பெண் சார்ந்ததாகவும் பார்க்கப்படுகிறது. எனவே, ஒரு பெண் சுய அனுபவம் சார்ந்ததாகவே எழுதத் தூண்டப்படுகிறாள்.

ஒரு ஆணின் எழுத்தில் பலதார மணத்தைக் காண நேர்ந்த சமுதாயம், அது அவனது பரந்துபட்ட அனுபவத்தைச் சொல்வதாகவும் அவனின் கூடுவிட்டுக் கூடு பாயும் சான்றுக்கு உதாரணமாகவும் கொள்கிறது. ஆனால், ஒரு பெண் நேரடியான பாலுறவு பற்றி எழுதும் போது அது அவளின் வெட்கங்கெட்ட பல ஆண்களின் சவகாசம் என்பதாக உரத்துச் சொல்லப்படுகிறது.

எனக்குத் தெரிந்த ஒரு பெண் எழுத்தாளர் தனது வாழ்க்கையில் எழுத்துக்காக துறந்தவை அதிகம், இழப்புகள் அதிகம். சமுதாயம் அவளின் 'கற்பிழப்பாக' அதை வெளியிட்டு அவளின் நடத்தையைப் பரிகசித்தது. அது எழுத வரும் பெண்களுக்கு இன்னமும் ஒரு முத்திரையாக குத்தப்படுகிறது.

'அஸ்மிதா' என்ற அமைப்பில் தமிழ் சார்பாக நான் கலந்துகொண்டேன். அதில் இந்திய அளவில் எல்லா மாநிலங்களிலிருந்தும் எழுத்தாளர்களின் சந்திப்பில் முதன்மையாக எடுத்துக்கொள்ளப்பட்டது 'தணிக்கை மற்றும் பெண் எழுத்து' என்பதாகும். அங்கு பல பெண்களின் எழுத்துகளை எடுத்துக்கொண்டு அது சார்ந்து வாதம் முன்வைக்கப்பட்டபோது, பெண் மனத்தளவில் தணிக்கை செய்தே படைக்கிறாள் என்று கூறப்பட்டது. அது ஓரளவிற்கு.

பத்து ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட ஒரு கவிதை. ஒரு சிறுபான்மை சமுதாயம் சார்ந்த பெண் எழுதியது. அது அப்போது அங்கீகரிக்கப்பட்டது. பாராட்டவும் பட்டது. ஆனால், பின்னாட்களில் நாட்டு நடப்பைக் கருத்தில் கொண்டு தடை செய்யப்பட்டது. ஒரு எழுத்து எப்படி ஒலிக்க வேண்டுமென்பதை ஆண் தீர்மானிக்கிறான். மறுபிரசுரம் செய்யும் போது, மதத்திற்கு கட்டுப்பட்டு அதில் சில வரிகள் நீக்கப்படல் வேண்டும் என அவள் நிர்ப்பந்திக்கப்படுகிறாள். இதுபோல், வெகுஜன இதழ்களில் கவிதை வரும் போது அதை அவர்கள் தணிக்கை செய்தே வெளியிடுகின்றனர். மதம் என்பது பெண்ணின் எழுத்தைக் கட்டுப்படுத்தும் சாதனமாக ஆகிறது.

பெண்களின் எழுத்து பெண் விடுதலை சார்ந்ததாகவே இருக்கப் படல் வேண்டும் என்ற எதிர்பார்ப்பும் தீர்மானமும் 20 ஆண்டுகளுக்கு முன் பெண் எழுத்தின் முன்னால் வைக்கப்பட்டது. தற்காலத்தில் பெண் தனது அந்தரங்கம் பற்றி வெளிப்படுத்துவதில்லை, ஆண் - பெண் உறவு சார்ந்து தன் அனுபவத்தை முன்வைப்பதில்லை என்ற குற்றச்சாட்டு. இது போன்ற குற்றச்சாட்டுகளையும் எதிர்பார்ப்புகளையும் ஆதிக்கம் செலுத்துபவர்களுக்கு உரிமையாக வழங்கியவர் யார்? இதுபோன்ற குற்றச்சாட்டுகளாலும் எதிர்பார்ப்புகளாலும் கடுமையான விமர்சனங்களாலும் பெண் எழுத்து தொடர்வதில் பாதிப்பு உண்டாகிறது. இவை அனைத்துமே பிராந்திய மொழிகளில் எழுதும் போது அதிகம் நிகழ்கிறது. ஆங்கிலத்தில் எழுதும் பெண்களுக்கு அங்கீகாரம் பரவலாக கிடைக்கிறது, கூடுதல் சுதந்திரமும் கிடைக்கிறது.

தலித் பெண்களின் படைப்புகளும் பரிசோதனை முயற்சிகளும் மராட்டியிலும் மலையாளத்திலும் சீக்கிரம் அங்கீகாரம் பெறுகிறது. பெரும்பான்மையான பத்திரிகைகளில் இடமும் பெறுகின்றன. எனவே, அவர்கள் கடந்து சென்ற தொலைவு மற்றவர்களை விடவும் அதிகம்தான்.

தமிழில் மற்றொரு சிக்கலும் கவிதைக்கு உண்டு. கவிதைகளுக்கும் பாடல்களுக்கும் இடையிலான பிரிவு இன்னமும் பலரால் அறியப்படாததாகவே உள்ளது. இதனால், சினிமா பாடல்கள் கவிதை என அடையாளம் காணப்படுகின்றன. சமீபத்தில் கர்நாடகாவைச் சார்ந்த ஒருவரைச் சந்திக்க நேர்ந்தது. அங்கு பாடலாசிரியர்களை கவிஞர்களுக்கு இணையாக்குவதில்லை. தமிழில் தான் இரண்டையும் போட்டுக் குழப்பிக் கொள்கின்றனர்.

மலையாளக் கவிஞர் ஓ.வி. உஷா உடனான உரையாடலின் போது அறிந்துகொண்டது இது. ஓ.வி. உஷாவின் கவிதை ஒரு சினிமா இயக்குநருக்குப் பிடித்ததாக இருந்ததனால் தான் எடுக்கும் படத்தில் உபயோகிக்கலாம் என்ற எண்ணம் கொண்டு



ஓ.வி. உஷாவை அணுகி கவிதைக்கு அனுமதி பெற்றிருக்கின்றனர். அதை மெட்டமைத்துப் பாடலாக்கி படத்தில் உபயோகித்தும் உள்ளனர். அது பெரும் வெற்றியைப் பெற்றது. தேசீய விருதையும் பெற்றது. ஓ.வி. உஷா கவிதைகள் அங்கு பாடவும் படுகின்றன. ஆனால், தமிழில் தான் 10 பல்லவிகளையும், இருபது சரணங்களையும், ஒரு மூட்டை எக்ஸ்ட்ரா சொற்களையும் கட்டிக்கொண்டு, தயாரிப்பாளர்கள், இயக்குநர்கள் கட்டளைக்கு இணங்கி பாடல் அமைத்து பாடாலாசிரியர்கள் ஆகின்றனர். அவர்களுக்கு புகழ், பெயர், பணம், விருது என கவிஞரின் அங்கீகாரமும் கிடைக்கப் பெறுகிறது.

இதையெல்லாம் இந்தத் தொடரில் பேச இருக்கிறேன்.

வேதகாலத்தில் இருந்து தொடங்கலாம்...

இலக்கியமானவை கதை,கவிதை என பிற்காலத்தில் விரித்து எழுதப்பட்டாலும் உரை நடை இல்லாத ஆதி காலத்தில் அனைவரின் படைப்பும் கவிதை நடையில் இருந்து வந்தது குறிப்பிடத்தக்கது. மனதில் நிற்கும் வண்ணம் பாடல்களாக (கவிதைகளாக) அமையப்பெற்று, அவற்றை ஒரு இசைக்குள்ளும் தாளத்திற்குள்ளும் அடக்கிப் பாடிப் பரப்புவதாக இருந்த காலம்.

அக்காலத்தில் பெண்கள் சம உரிமை பெற்று ஆண்களுக்கு நிகராக விளங்கினர் என்று வரலாறு கூறுகிறது. பெண்ணானவள் கல்வி, நுண்கலை, வேதப் பயிற்சி, போர்க்கலை, விஞ்ஞானம் என்று பல துறைகளிலும் பங்கெடுத்துள்ளாள். பெண்ணின் திருமணத்திற்கான முக்கியத் தகுதிகளில் ஒன்றாகக் கல்வியும் கூறப்பட்டுள்ளது. திருமணம் மறுத்துத் தனித்து வாழும் சுதந்திரமும் வேதகாலத்தில் பெண்களுக்கு இருந்ததாக கண்டறியப்படுகிறது. ‘சுபலா’, ‘ஸ்துருதவதி’ என்ற வேதகாலப் பெண்கள் திருமணம் மறுத்து, ஆன்மீகத்தில் ஈடுபட்டு வாழ்வைக் கழித்ததாக அதர்வண வேதத்தில் குறிப்பு கிடைக்கிறது.

கணவன் வேள்வி செய்யும்போது பிழைசெய்தால், உடனிருக்கும் மனைவி சுட்டிக்காட்டித் திருத்தும் அளவுக்கு கல்வியில் பயிற்சி பெற்றிருந்தனர் வேதகாலப் பெண்கள் என திரு.வி.க. குறிப்பிட்டுள்ளார்.

வேதகாலத்தில், ஆணுக்கு நிகராக, தம் வாழ்நாள் முழுவதும் சமயம், தத்துவம், கல்வியைத் தெர்ந்தெடுத்துப் பயின்ற பெண்கள் ‘பிரம்ம வாதினிகள்’ என அழைக்கப்பட்டனர். திருமணம் வரை மட்டுமே கல்வி கற்கும் பெண்களை மற்றொரு வகையாகக் காணமுடிகிறது. கணவனுக்குப் போரில் தேரோட்டியது, அரசனுடன் போர்க்களம் சென்று போரிட்டது போன்ற செய்திகளும் காணக் கிடைக்கின்றன.

வேதகாலப் பெண்பாற் புலவர்களின் பாடுபொருளாக அவர்களின் சொந்தப் பிரச்சினைகள் பல கவிதைகளில் கையாளப்படுகின்றன. தனக்கு



உண்டான நோயின் காரணத்தால், கணவன் தன்னைப் பிரிந்த துயரத்தில், தனது குறை தீர்க்க பாடும் பாடலாக ஒரு கவிதை அமைந்துள்ளது. ஆனால், அதில் விளையாத, பொய்த்துப்போன நிலத்தின் உற்பத்தியைப் பற்றியும் செய்தி வருகிறது.

மனித மனம் நிகழ்வு சார்ந்ததாகும். நிகழ்வுகள் சமுதாயக் காலசுழலுக்கு ஏற்றதாகத்தான் அமையும். ஒரு படைப்பென்பது, தான் கண்ட அல்லது அனுபவித்த அல்லது பிறரால் உணரப்பட்ட என, ஏதாவது ஒரு பாதிப்பின் அடிப்படையில்தான் எழும்.

மனிதன் ஒரு சமுதாய விலங்கு; பெண் அதில் ஒரு அங்கம். எனவே, பெண் அல்லது ஆண் யாராகிலும் சமுதாயம் பற்றிய அக்கறையற்று எந்நேரமும் இருக்க இயலாது. எப்போதும் ஒரே மாதிரியான அக்கறையுடன் தான் செயல்படுகிறேன் எனவும், தனது எண்ணம் எப்போதும் சமுதாயம் சார்ந்தது என்றும், படைப்பாளி உரத்துக் கூறிக் கொள்வதும் இயலாது.

மற்றொரு வேத காலத்து பெண்பால் புலவரும் தன் நோய் காரணமாக முதிர் கன்னியாக நிற்கும் தனது வேதனையை வெளிப்படுத்துவதற்கான கவிதையைப் படைத்துள்ளார். பக்தியின் மூலம் தேவர்களிடம் வேண்டுகோள் விடுக்கும் இவர், ஒவ்வொரு கவிதையிலும் தேவர்களால் குறைகள் நீக்கப்பட்டு நல் வாழ்வு அடைந்த மானுடர்களை உதாரணமாக்கி, அவற்றின் மூலம் தான் அடைந்திருக்கும் வேதனையையும் தனது நோயையும் தேவையையும் நீக்கிப் பூர்த்தி செய்யுமாறு பணிக்கிறார். நோய், நோய் சார்ந்த அவமானங்கள், சமுதாயப் பார்வை, மனச்சோர்வுகள் ஆகியவற்றுடன் தனது உடல் தேவைகளையும் இணைத்துக் குறிப்பிடுகிறார்.

சசுவதி என்ற மற்றொரு பெண் கவி தன் கணவன் நோய் தீர்க்க இறைவனை வேண்டி நின்று கவிதைகள் படைத்துள்ளார்.

மற்றொரு பெண் கவி, முனிவர் மனைவி. அவர், தனது கணவர் இல்லற நெறியைத் துறந்து எப்போதும் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பதால் தனது இளமை முழுவதும் பாழ்பட்டுப் போனதைக் கவிதைக்கான கருப்பொருளாக ஆக்குகிறாள். பாடலின் பொருள் உணர்ந்த முனிவர், தன் காமம் திறக்கிறார் என அவரின் பதிலான பாடலும் பதிவாகி உள்ளது.

தாம்பத்திய உறவுக்கு அழைக்கும் பெண் கவியின் கணவன், அவளது உடல் இன்னமும் பூரண வளர்ச்சி அடையாததால், தனக்கு ஈடு தர இயலவில்லை; எனவே, 'நான் உன்னிடமிருந்து ஒதுங்குகிறேன்' என்று கூறிய பாடலுக்கு பதிலாக தன் உடல் வளர்ச்சியின் பூரணத்துவத்தைப் பற்றிக் கூறுகிறாள் மற்றொரு கவி.

பல மனைவிகள் உள்ள கணவன் தன்னிடம் முழு அன்பு செலுத்துவதில்லை என்பதால், அது பற்றி ஆண்டவனிடம் முறையிட்டு தனக்கு சக்களத்திகளே இல்லாமல்போகும் படி வேண்டுகின்றனர் சிலர். இதில் இந்திராணி ஒருத்தி தன் கணவனை வசப்படுத்தும் மூலிகைகளைத் தேடியும் அலைகிறாள். இவைகளும் கவிதைகளில் பதிவாகி உள்ளன.

ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் வரும் தேவி ஸூக்தம், வாக்தேவி என்ற பெண் கவிஞரால் இயற்றப்பட்டது. ஸூக்தம் என்பது ஒரு பொருளைப் பற்றிய பல கவிதைகள்.

இப்படி, முதிர்கன்னியின் உணர்வு, புதுமணப் பெண், அன்பு நிறைந்த மனைவி, பொறாமை பிடித்த மனைவி, கணவனால் நோய் காரணமாகக் கைவிடப்பட்டவள், புலன் இன்பம் அதிகம் நாடிய பெண், சகோதரனை விரும்பிய பெண், நிறைவு பெற்ற வாழ்க்கை வாழ்ந்தவள், ஆன்மீகம் நாடிய பெண்கள் என பலதரப்பட்ட பெண் கவிஞர்கள் வேதகாலத்தில் காணக் கிடைக்கின்றனர்.

(தொடரும்)

க்ருஷாங்கினி <nagarajan63@gmail.com>


World class service for Design & Construction of Precast Buildings
We thank all our customers for their trust & confidence endowed upon us. Its our mission to continually strive to provide cost-effective & high quality PRECAST products
European Technology
Modern Construction
TEEMAGE
PRECAST
4 PRECAST FACTORIES
15 CRANES + 2 tower cranes
50 LAKHS SQ.FT CONSTRUCTED
Class 1A contractor of CPWD, SPL class contractor in R&B Andhra,
executed precast construction for CRPF, NBCC, NPCIL, DMRC, ISRO
150 PROJECTS COMPLETED
350 ENGINEERS
2000 EMPLOYEES
School in Coimbatore
25,300 Sq.ft
completed within 60 days
Commercial Mall
2,25,000 Sq.ft
completed in 120days
Hostel Building
26,000 Sq.ft
completed in 70 days
Housing for CRPF
72 Days 1 Block
251 Houses 11 Months
EASIER
FASTER
BETTER
SERVICES OFFERED
• Design & Detailing
• Planning
• Production
• Transportation
• Erection
TYPES OF BUILDING
• Commercial
• Industrial
• Institutional
• Residential
• Multi level-Car Parking
TEEMAGE
Corporate Office :
6/35, College Road, 1st Cross Street, Tiruppur - 641 602.Tamilnadu. India. Ph : 0421 2240488.
4 Precast Factories Pan India
Coimbatore | Delhi | Hyderabad | Chennai
82204 55555, 82200 51777
email : sales@teemageprecast.in
marketingteemage@gmail.com
web : www.teemageprecast.in

# கொலைக்கு சாட்சி!

**நோயல் நடேசன்**



லூர்து மாதாவைத் தரிசிக்க பாரிசில் நாங்கள் ஏறிய ரயில், பிரான்சின் தென் மேற்கிலுள்ள லூர்து மாதாவின் தேவாலயம் அமைந்த லூர்து என்ற சிறிய நகரை நோக்கி வேகமாக சென்றது. கிட்டத்தட்ட ஐந்து மணிநேரத்திற்கு மேலான பயணம் அது. மாலை நான்கு மணியளவில் ஏறிய ரயில் லூர்து நகரத்தை நோக்கி வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. விரைவு ரயில் என்பதால் பெரிய நகரங்களில் மட்டுமே நிற்கும். மாலை நேரத்து சூரிய வெளிச்சம் கண்ணுக்கு இதமாக இருந்தது. ரயில் கண்ணாடி வழியே வெளியே எட்டிப் பார்த்தபோது பச்சைக் கம்பளத்தின் மேல் சிறுவனது பொம்மை ரயில் ஓடுவதுபோல் கண்ணுக்குத் தெரிந்தது.



பிரான்சின் அந்த நிலப்பகுதி குன்றுகளற்ற, பச்சை நிறமான சமவெளியாக கண்ணுக்கெட்டிய வரையும் தெரிந்தது. அதிகாலையில் கோலம் போட்டதுபோல் இடையிடையே மஞ்சள் பூத்த கனோலா வயல்கள் வந்து வண்ணம் தெளித்தன. மாலை வானம் ஆகாயத்தில் ஹோலி பண்டிகை அரங்கேற்றியது.

மாலை மயங்குவதற்கு முன்பாக உணவுகள் விற்கும் புஃபே பகுதிக்குச் சென்று சான்விட்சை வாங்கிக்கொண்டு வந்து மனைவி சியாமளாவுடன் உணவுண்டேன். உணவருந்திய களைப்புடன் ஏற்கனவே செய்த விமானப் பயணத்தின் உடல் சேர்வு என்றபடி சியாமளா ஜன்னலோரம் கண் மூடியபடி தூங்குவதற்குத் தயாராக

இருந்தபோது, நான் எனது மடிக் கணினியை எடுத்து, ஏற்கனவே பயணத்தில் எடுத்த படங்களை பார்க்கத் தொடங்கினேன். அதன்பின் பயணத்தில் உள்ள விடயங்கள் பற்றிய சில குறிப்புகளை எழுதத் தொடங்கினேன்.

பாரிசில் எங்களுடன் ரயில் ஏறிய பலர், உலகத்தின் சிறந்த வைனுக்கான திராட்சைகள் விளையுமிடமான, போரடெக்ஸ்ல் **(Bordeaux)** -இல் இறங்கிவிட்டார்கள்.

பச்சைக் கம்பளமாக வெளியே விரிந்து கிடந்த நிலப்பகுதிகளைப் இப்பொழுது இருள் தனது பெரிய வயிற்றிற்கு இரையாக்கிக் கொண்டது. மூலை இருக்கையில் மனைவி சியாமளா இருந்ததால் கொஞ்சம் சாய்ந்து இருப்பதற்கு வசதியாக எனக்கும் ஒரு மூலை இருக்கையைத்தேடி, ரயில் பெட்டியின் முன்னே இருந்த இருக்கையில் வசதியாக அமர்ந்து கொண்டேன்.

அமரும்போது என் முன்பான இருக்கைகளில் இருந்த வயதான பிரான்சிய தம்பதியினருக்கு நாகரீகத்திற்காக "ஹலோ" எனச் சொல்லிவிட்டு எனது கண்ணை மூடினேன். கண்களை மூடியவுடன் எண்ணங்கள் அந்த விரைவு ரயிலைவிட வேகமாக பயணம் செய்தது.

இந்தப் பயணம் காசி, ராமேஸ்வரம், கதிர்காமம் போல் ஒரு தலயாத்திரை. ஆனால், கத்தோலிக்க தேவாலயத்துக்கானது. இலங்கையில் மடு மாதாவிடமும் இந்தியாவில் அன்னை வேளாங்கண்ணி யிடமும் மனைவிக்காக தல யாத்திரை செய்துள்ளேன். இம்முறை சியாமளா பல வேண்டுதல்களுடனும் விண்ணப்பங்களுடனும் லூர்து மாதா கோவிலுக்கு வருவதாக வேண்டிக்கொண்டதன் பயனாகவே இந்த பயணம் மேற்கொண்டுள்ளோம். எனக்கு இறை நம்பிக்கை அதிகமில்லை. அத்துடன் ஏற்கனவே பத்து வருடங்கள் முன்பாக இங்கெல்லாம் போ யிருந்ததால் பெரிதான ஆவலில்லை. ஆனாலும், கட்டிய மனைவிக்கான விட்டுக் கொடுப்புகள் வாழ்க்கையில் எப்போது செய்யவேண்டும் என்பதை இந்த அரைநூற்றாண்டு இல்லறம் உணர்த்தியுள்ளது. மேலும் பிரயாணங்கள் எனக்குச் சலிப்பூட்டுவதில்லை. பிரயாணங்களில் வித்தியாசமான மனிதர்களையும் அவர்களது நடவடிக்கைகளையும் அவதானிக்க முடிவது எழுத்தாளனான எனக்கு பலவிதத்தில் உதவுகிறது.

மனிதர்களில் வெளிப்பார்வைக்குக் கண்ணில் தெரியும் புறத்தோற்றங்களை நாம் வித்தியாசங்களாகப் பார்க்கிறோம்; பேசுகிறோம்; அதை வைத்து அரசியல் செய்கிறோம். ஆனால், மனிதர்களது அகவெளிகள் அதினிலும் பல மடங்கு வித்தியாசமானது- ஆழமானவை - கணத்துக்குக் கணம் மாறும் தன்மையுள்ளவை. உதாரணமாக ஒருவரை மார்க்சியவாதி, இனவாதி அல்லது மத அடிப்படைவாதி என நிரந்தரமாக முத்திரை குத்திவிடுவோம். ஆனால், அவர் ஆச்சரியமாகத் தன்னை ஒவ்வொரு விடயத்திலும் மாற்றிக் கொண்டிருப்பார். இதைவிடச் செயல்களில் ஒருவர் உலோபி அல்லது வள்ளல் என நிரந்தரமான பெயர் கொண்டவர் சில நேரங்களில் அவரது செய்கையில் முற்றாக மாறுபட்டுத் தெரிவார். ஆற்றில் ஓடும் நீர் போல் மன எண்ணங்கள் எதுவும் நிரந்தரமானது அல்ல. மனிதர்களது எண்ணங்கள் இடம், காலத்திற்கு ஏற்ப மாறுபடுகிறது என்பது நம்மில் பலர் உணர்வதில்லையே!

இந்த விடயத்தை மனத்தில் வைத்தபடி நாம் ஒருவரை அவதானித்தால் எமக்கு அவரது செய்கையே முக்கியமானது. அந்த செய்கையின் விளைவே நமக்குத் தெரிவது. அதனாலே அரசுகள் குற்றங்களை மட்டும் பார்க்கிறது. அதற்காகத் தண்டிக்கிறது. குற்றங்கள் செய்ய நினைப்பதைத் தண்டிக்க முடியாது. மதத்தில் மட்டுமே கெட்டதை நினைப்பதும் குற்றமெனச் சொல்லப்படுகிறது அதனாலே மதம் நல்லது எனப் பலர் நினைத்த போதும் யார் தவறான விடயங்களை நினைக்காது விடுகிறார்களா என்ன? எந்த மதத்தவன் குற்றங்கள் செய்யாது இருக்கிறான்? அதனால் தற்போதைய உலக வாழ்வில் மதம் எந்த பிரயோசனம் அற்றது மட்டுமல்ல, மனிதர்களுக்கு சுமையாகிவிடுகிறது. ஒவ்வொரு மதமும் தன்னளவில் குற்றங்களைக் சுமக்கும் பாவ மூட்டை போன்றது. இந்து மதம் தன்னுடன் சாதியை வைத்து, சக மனிதனைக் கீழே வைத்து, புவியில் பல்லாயிரக்கணக்கான வருடகால பரிணாமத்தில் உருவாகிய உன்னதமான மானிடத்தை இழிவு படுத்துகிறது. அதேபோல் சகோதரத்துவம் பேசும் இஸ்லாம் மதம் ஆதியிலிருந்தே ஆப்பிரிக்க அடிமைகளை வைத்திருந்தது. கொடுமைகளை எதிர்த்து உயிர்விட்ட தேவமகனின் பெயரில் உருவான கிறீஸ்துவ மதம் மத்திய காலத்தில் செய்த கொடுமைகள் அளவற்றது. புத்தமதம், சிந்தனையில் பக்குவம் பெறாத குழந்தைகளை, அதுவும் ஏழைக் குழந்தைகளை மதத்தின் பெயரால் தொடர்ந்து மூளைச் சலவை செய்கிறது: இந்த காலத்திலும் இதையிட்டு எவரும் பேசுவதில்லையே?

இப்படியான எனது சிந்தனையோட்டம், புல்லைக் கண்ட இடத்தில் கடித்தபடி அலையும் கடிவாளம் அற்ற குதிரையாக சமவெளியில் ஓடியது.

எவ்வளவு நேரம்தான் கண்ணை மூடியபடி இருப்பது? இரவு பத்து மணிக்கு மேலாகிவிட்டது. இன்னமும் ஒரு மணி நேரத்தில் எமது இடம் வந்துவிடும். பயணத்தால் தூக்கத்துக்கான கால நேரங்கள் மாறிவிட்டது.

கண்ணெதிரே இருந்த அந்த தம்பதிகளைப் பார்த்தேன். என்னெதிரே இருந்த பெண் அறுபது வயதானவர். ஒரு காலத்தில் காண்போரை



வசிகரிக்கும் கவர்ச்சியாக இருந்த தொல்லியல் சான்றுகளுடன், சிவப்பு மேற்சட்டையும் கருப்பு பாண்டும் மிகவும் மெல்லிய சிவப்பு உதட்டுச் சாயமும் பூசியவர். குட்டையாக வெட்டப்பட்ட நரைத்த தலைமயிர். அவரது கழுத்திலிருந்து நாடிக்கு வரும் நேரான கோடுபோல் தெரிந்த தோல் மடிப்புகள் இருந்த போதிலும், முகத்தில் ஒரு கம்பீரமான சாயல் தெரிந்தது. நீலமான இரு கண்களும் வாகனத்தின் ஹைய் பீம் லைட்டாக ஒளிர்ந்தன.

நான் தன்னைக் கூர்ந்து பார்ப்பதை உணர்ந்ததும் பெண்ணின் மெதுவான புன்முறுவல் முகத்தில் பூத்தது. பதிலுக்குச் சிரித்துவிட்டு அவரது அருகே இருந்த ஆணைப் பார்த்தேன். வெள்ளை சேட்டு, வெள்ளைப் பாண்ட், நரைத்த தலையுடன் மூக்குக் கண்ணாடி அணிந்தபடி ஆனால், கண்களை மூடியபடி மனைவியின் தோளில் குழந்தைபோல் சாய்ந்தபடி உலகத்தை மறந்து அமர்ந்திருந்தார். அவரது இரு கைகள் மனைவியின் கைகளின் உள்ளே அன்னியோன்னியமாகப் புதைக்கப்பட்டிருந்தது. மனைவியிலும் அவருக்கு பத்து வயது கூட்டி எழுபது வயது என கணக்குப் போடமுடியும். முதிர்ந்த தோற்றமாக தோன்றினாலும் உடல் பருமனற்று திடகாத்திரமாக தெரிந்தது. இளம் வயதில் ஏதாவது விளையாட்டு வீரராக இருக்கலாம் என்பதற்குச் சாட்சியாக விரிந்த தோள்களும் இறுகிய தசைகளில் புடைத்த இரத்த நாளங்கள் முன்கைகளில் இருந்தன.

அந்த பெண்ணின் அமைதி தவழும் முகத்தை கூர்ந்து பார்த்தபோது அவளது நெற்றியில் மற்றும் இடது கண்ணருகே இரண்டு கருப்பான இடங்கள் கரும் திராச்சை கனியாயத் தெரிந்தன. அவை பழைய காயங்கள் என எனது மருத்துவ மூளைக்குப் புரிந்தது.

அவை எப்படி ஏற்பட்டிருக்கும்? இந்த வயதில் குடும்ப வன்முறை சாத்தியமா?

கணவனால் ஏற்பட்டவையா? விழுந்து ஏற்பட்ட காயங்களாக இருக்கலாமோ என்ற ஆராய்வில் எனது மனம் அலை மோதியது . கணவன் எழுபது வயதானவர். அவரது வயது, உடலின் தோற்றம், , மனைவியின் தோளில் அன்னியோன்னியமாக சாய்த்திருந்த விதம் அவரை வன்முறையாளராகக் காட்டவில்லை. பல வருடங்கள் ஒன்றாக வாழ்ந்து முதுமையடைந்த இலட்சியத் தம்பதிகளாகக் காட்டியது.

எப்படி காயம் பட்டிருந்தாலும் அந்தப் பெண்மீது ஒரு அனுதாபம் அல்லது ஈர்ப்புடன் அவளைப் பார்த்துச் சிரித்தேன். அவளும் சிரித்தாள்

பிரான்சில் ஒரு சில இளைய சந்ததியினரைத் தவிர மற்றவர்களுக்கு ஆங்கிலம் புரியாது. வழி கூடபேசி அறிந்துகொள்ள முடியாத நிலை. எப்படி இந்தப் பெண்ணிடம் பேசமுடியும்?

ஏதாவது ஒரு பிரெஞ்சு வார்த்தையைப் பேசிவிட்டு அதன்பின் ஆங்கிலம் பேசினால் பேசுவார்கள் என நண்பன் சொன்னது நினைவுக்கு வந்தது.

அந்த பெண்ணிடம் “பொன்ஜோர்” என்றேன்.

அவளும் அதை எதிரொலித்தார்.

“இதற்கு மேல் பிரெஞ்சு மொழி தெரியாது. ஆங்கிலம் மட்டுமே தெரியும் நான் ஸ்ரீலங்காவில் பிறந்து அவுஸ்திரேலியாவில் வசிக்கிறேன்” என்றேன்.

“நான் பாரிசில் வசிக்கும் இளைப்பாறிய ஆங்கில ஆசிரியர், என் பெயர் வெரோனிக்கா” என்றார்

அழகிய சிரிப்புடன்.

அதன் பின்பு எங்கள் உரையாடல் ஆங்கிலத்தில் நடந்தது. ஆனால், அவரின் கணவரிடம் மெதுவான அசைவுகளைத் தவிர வேறு எந்தவிதமான உயிர்ப்பும் தெரியவில்லை. ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதுபோல் எனக்கு தோன்றியது.

“எனது கணவருக்கு டயபட்டீஸ் நோய் உள்ளது” என்றார்.

“எனக்கும் உள்ளது” என ஆற்றுதலாக சொல்ல முயன்றேன்.

சிரித்தபடி “அது மட்டுமென்றால் பிரச்சினையில்லை. என்னால் சமாளிக்கமுடியும்” என்றார்,

எனது முந்திரிக் கொட்டைத்தனத்தை நொந்துகொண்டேன்.

சிறிது நேரம் மௌன இடைவெளியின் பின்பாக தொடர்ந்தார்:“அவரது வலிப்பு நோய் சமீபத்தில்தான் வந்தது. பரிசோதித்துப் பார்த்ததில், மூளையில் கட்டி ஒன்று இருப்பதாகவும் ஆனால், அதை வெட்டி அறுவை சிகிச்சையால் எடுக்க முடியாத இடத்தில் இருப்பதாகவும் சொன்னார்கள். வலிப்பு வருமுன்பு கோபத்துடன் எதையாவது தூக்கி எறிவதும் நான் தடுக்க நினைக்கும்போது என்னைத் தள்ளுவதும் நடக்கும். அந்த வலிப்பு அரை மணி நேரமாவது நீடிக்கும். அதன் பின் அமைதியாக பல மணிநேரம் தூங்குவார். ஆரம்பத்தில் இடையிடையே வந்த வலிப்பு இப்பொழுது பெரும்பாலும் தினசரி வருகிறது. அவரை வீட்டில் வைத்து என்னால் பராமரிக்க முடியாது என்ற நிலை வந்ததால் ஒரு பாதுகாப்பான நிலையத்தில் விடவிருக்கிறேன். நானே நித்திரை மருந்துகளால் அவரை அமைதியாகவைத்திருக்கிறேன். அங்கு சென்றால் அவர்கள் அதையே செய்வார்கள். கட்டிலில் வைத்து ஊசி மூலமாக மயக்கத்தில் வைத்திருப்பார்கள். அந்த வாழ்க்கையை அவர் வாழ்வதை நான் வெறுக்கிறேன்.... ஆனாலும் வேறு வழி தெரியவில்லை. எனது இரு பிள்ளைகளும், ‘இதுவரை பராமரித்தது போதும், உன்னால் முடியாது’ எனச் சொல்கிறார்கள். நாங்கள் கத்தோலிக்க மதத்தை சேர்ந்தவர்கள். எனது மனச்சாட்சிக்கு இது மிகவும் துன்பமாக இருக்கிறது. நன்மையிலும் தீமையிலும் இளமையிலும் முதுமையிலும் ஒன்றாக இருப்போம் என்றே லூர்துமேரி தேவாலயத்தில் திருமணம் சபதம் செய்துகொண்டோம். இப்பொழுது அவரது கடைசி காலத்தில் கை கழுவுவது போல் நடப்பது எனது மனசாட்சிக்கு செய்யும் குற்றமாக நினைக்கிறேன். ஆனால், வேறுவழி இல்லை என்பதால் அவரை பராமரிக்கும் நிலையம் ஒன்றில் சேர்ப்பதன் முன்பாக லூர்து மாதாவிடம் கொண்டு சென்று அவரிடம் ஒப்புவிக்கப்போகிறேன். எனக்குத் தெரியும் அதனால் எதுவித பிரயோசனமும் இல்லை என... ஆனால், எனது மனசாட்சியைச் பரிசுத்தப்படுத்த இருவரும் அங்கு செல்கிறோம்.”

“நாங்களும் லூர்து மாதாவிடம் செல்கிறேம்” என்றேன்

“அப்படியா?” என ஆச்சரியட்டுவிட்டு, “நான் ஆரம்பத்தில் ஒரு கன்னியாஸ்திரீயாகவும் ஆசிரியராகவும் இருந்தேன். பிரான்சின் சிறிய நகரமொன்றிலிருந்து லூர்து மாதா தேவாலயத்திற்கு பாடசாலைப் பிள்ளைகளைக் கூட்டி வந்தேன். அப்பொழுது இவரும் ஒரு ஆசிரியராகப் பிள்ளைகளுடன் வந்தபோது இருவரும் சந்தித்தோம். இருவரும் ஆரம்பத்தில் நண்பர்களாக பழகிபின்பு அந்த நட்பு காதலாகியது. திருச்சபையின் அனுமதியுடன் மடத்திலிருந்து விலகி நாங்கள் திருமணம் செய்தோம். ஒவ்வொரு வருடமும் லூர்து நகரத்திற்கு வருவோம். எங்கள் இரு பிள்ளைகளும் ஞானஸ்தானம் எடுத்தது இங்குதான். எங்களுக்கு லூர்து மேரி முக்கியமான தெய்வமாக நினைக்கிறோம்.”

மழைக் காலத்தில் கொட்டும் அருவியாக வெரோனிக்காவின் வார்த்தைகள் என் முன்னால் வந்து தெறித்தன. ஒரு பெண்ணின் அந்தரங்கத்தை அறிமுகமற்ற மூன்றாம் மனிதனான என்னிடம் கொட்டித் தீர்ப்பதில் என்ன பயன் என நினைத்தேன். அத்துடன் அறிமுகமற்ற ஒருவரது அந்தரங்கத்தை தோண்டி வெளியில் எடுத்த குற்ற உணர்வும் எனக்கு ஏற்பட்டது. ஆனாலும் தனது நெஞ்சின் ஆழத்திலிருந்த நினைவுகளை, நிலத்தில் புதைந்த இரும்புப் பாத்திரத்தின் துருவாக வெளியே எடுப்பது ஒரு விதத்தில் மன ஆறுதலாகவும் சொஸ்தமளிக்கும் சிகிச்சையாகவும் இருக்கும் என கேள்விப்பட்டிருக்கிறேன். என்னிடம் வெரோனிக்கா எந்த தீர்வையே ஆலோசனையையோ கேட்கவில்லை. நான் செய்யக்கூடியது: அந்தப் வெரோனிக்காவின் மனக்குறைகளை செவிமடுப்பதன் மூலம் அவளுக்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கலாம் என மட்டுமே நினைத்தேன்.

பண்டைய அரச நகரமான போ (Pau) நகர் வந்தபோது பலர் இறங்கினார்கள். இதுவே லூர்து நகரத்திற்கு முன்பு உள்ள ரயில் நிலையம். இதன்பின்பு, அரை மணிநேரத்தில் லூர்து நகர் வரும் எனக் கூகுள் மூலம் அறிந்து வைத்திருந்தேன்.

எல்லோரும் இறங்கிய சில நிமிடத்தில் கணவன் தலை, வெரோனிக்காவின் தோளிலிருந்து சிறிது சரிந்ததுடன் அவரின் கழுத்தில் உள்ள தசைகளிலும் மெதுவான அசைவு தெரிந்தது.

நான் அவரைப் பார்த்ததை அவதானித்ததும் வெரோனிக்கா, “அவருக்கு இன்சுலின் ஊசி போடும் நேரம்” என அழுத்தமாக கூறினார்.

இன்சுலின் போட்டு சில நிமிட நேரங்களில்



குழுக்கோசின் செறிவு இரத்தத்தில் குறையும். அதனால் உடனே உணவு கொடுக்கவேண்டும். இல்லாது போனால் குழுக்கோஸின் செறிவு குறைய, முக்கியமாக மூளை இயங்காது 'கோமா' என்ற மயக்க நிலைக்குப் போகும் சாத்தியம் ஏற்படலாம். அதன்பின்பு மற்றைய உறுப்புகள் மெதுவாக இயங்க மறுக்கும் நிலையை அடையும் என்பது எனது மிருக வைத்திய அறிவுக்குத் தெரிந்தவை.

வெரோனிக்கா ஒரு தேமாஸ் பிளாஸ்க் போன்ற குளிர் பெட்டியில் வைத்திருந்த பேனா போன்ற இன்சுலின் ஊசியை எடுத்து, அவரது சட்டையைத் தூக்கி வயிற்றில் ஊசியை ஏற்றிவிட்டு மீண்டும் தனது தோளில் அவரது தலையை அவதானமாகச் சாய்த்து வைத்தாள்.

அவர்களது இந்த செய்கை அந்தரங்கமான விடயம் என்பதால் எனது தலையைத் திருப்பி வெளியே பார்த்தேன். இருள் ரெயிலை போர்த்தியிருந்தது. இடைக்கிடையே வெளிச்சம் மின்மினிப் பூச்சியாக ஒளிந்தது.

சிறிது நேரத்தில் மீண்டும் அந்த தம்பதிகளைப் பார்த்தேன். கணவரிடம் எந்த அசைவுகளும் இல்லை

நான் கேட்காமலே,"ஏற்கனவே அவருக்கு மயக்கும் மாத்திரை கொடுத்திருக்கிறேன். இந்த நேரத்தில் எப்படி உணவு கொடுக்க முடியும். இன்னும் மயக்கமோ தெரியவில்லை அல்லது அசதி போலிருக்கு" என வெரோனிக்கா அங்கலாய்த்தார்.

ரயிலின் ஓசையில் அந்தப் பதில் அரைகுறையாகக் காதில் விழுந்தாலும் எனக்கு அந்தப் பதில் திருப்தியில்லை. மனிதன் கோமாவுக்கு போய்விடலாம் என நினைத்தேன். ஆனாலும், எனது அரை குறையான மருத்துவ அறிவை வெரோனிக்காவிடம் வெளிக்காட்ட விரும்பவில்லை.

சில நிமிடத்தின் பின்பாக சும்மா இருக்க முடியவில்லை. மனத்தில் ஏதோ கெட்டது நடக்கப்போகிறது என்று பட்சி சொல்லியது.

"அவருக்கு உணவு கொடுக்க வேண்டாமோ?" என்றேன்.

"இன்னமும் சில நிமிடத்தில், லூர்து நகருக்குப் போய்விடுவோம்... அங்கு ஹோட்டலில் பார்த்துக்கொள்ளலாம்" என்றார்.

எனக்கு அந்தப் பதில் பிடிக்கவில்லை. "நான் போய் புஃபேயில் ஏதாவது வாங்கி வரவா?" மீண்டும் முந்திரிக் கொட்டையாக.

'தேவையில்லை" என்ற சொல் செந்நிற வர்ணம் பூசிய உதடுகளால் அழுத்தமாக உச்சரிக்கப்பட்டது. கொஞ்சம் கோபத்துடன் யன்னல் பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டேன்.

மீண்டும் வெரோனிக்காவிடம் என் பார்வை சென்றபோது அப்போது இதுவரை அந்தப் பெண்ணின் கைகளுக்குள் புகைந்திருந்த அவரது கை தளர்ந்து தொங்கியது!

அந்த கையை தனது கைகளால் பற்றிக்கொண்டு "குளிர்ந்து விட்டது" என்றாள்.

"எனது மனைவி வைத்தியர்" என்று கூறிவிட்டு நித்திரையாக இருந்த சியாமளாவை அழைத்து வந்தேன். அவர் கையை தொட்டுவிட்டு, "நாடி துடிக்கவில்லை" என்றார்.

வெரோனிக்காவிடம் எதுவும் சொல்லாது நான் எழுந்து அடுத்த பெட்டியிலிருந்த ரயில்வே அதிகாரியைக் அவசரமாக அழைக்க, அவர் வந்து கையைத் தொட்டு பார்த்துவிட்ட அங்கிருந்த இதயத் துடிப்பை உருவாக்கும் கருவியைக் (Cardiac defibrillator) கொண்டு வந்தார்.

அவரது பின்பாக மேலும் ஒரு ரயில்வே அதிகாரி வந்தார். அவர்கள் இருவருமாக பிரெஞ்சு மொழியில் பேசியபடி அந்த மனிதரைச் தூக்கி இருக்கைகளின் இடையே உள்ள நடைபாதையில் படுக்க வைத்தனர். அப்போது ரயிலில் பயணிகள் அதிகமில்லை. நாங்களும் அந்த இடத்திலிருந்து விலகி நின்றோம் . அந்த அதிகாரிகள் அந்த மனிதரது வெள்ளை சேட்டை இரண்டாகக் கோழி இறக்கையாகப் பிரித்தார்.

கிழிந்த சேட்டின் உள்ளே அணிந்திருந்த அவரது உள் பெனியனைக் கிழிக்க முயன்றபோது அது இலகுவாய் கிழியவில்லை. ரப்பராக இழுபட்டது. அதை தலையால் கழற்றிய பின் அந்த மனிதர் வெற்று மேலுடன் உரித்த கோழியாகக் கிடந்தார். அவரது பாண்ட் கரையூடாக வெள்ளை உள்ளங்கி தெரிந்தது.

எங்கு போனாலும் உள்ளங்கிகள் சுத்தமாக இருக்கவேண்டும். எந்த இடத்தில் எது நடக்கும் என்பது தெரியாது என எனது அக்கா முறையானவர் சொன்ன புத்திமதி மின்னி மறைந்தது.

அந்த மனிதரைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. அருகில் நின்ற வெரோனிக்காவை விலகச் சொல்லி விட்டு அந்த இதயதுடிப்பை உருவாக்கும் கருவியால் இரு கைகளையும் நெஞ்சில் வைத்து அழுத்தியபோது அந்த மனிதரது உடல் சிறிது துள்ளி அதிர்ந்தது. ஆனால், அவரது வெள்ளைக் காலணி அணிந்த இரு கால்கள் மேல் எழுந்து ரயில் இருக்கைகளை தொட்டு கீழே விழுந்து அடங்கியது. மற்றைய அதிகாரி நீல ஸ்ரெதஸ்கோப்பை இடது நெஞ்சில் வைத்து பார்த்துவிட்டு இதயதுடிப்பை உருவாக்கும் கருவி வைத்திருந்த அதிகாரியைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினார்.

மீண்டும் இருமுறை இதயத்துடிப்பை உருவாக்கும் கருவியால் நெஞ்சில் அழுத்தியபோது.... பாவம், அந்த மனிதனது உடல் எம்பிக் குதித்தது. மீண்டும் இரண்டு கைகளை வைத்து மார்பின் இடது பக்கத்தை சில முறை அழுத்தினார்.

கருவிக்கே இதயத்துடிப்பு வராதபோது கைகளால் அழுத்துவது வீண் வேலை எனப் எனக்குப் புரிந்ததால் சியாமளாவைப் பார்த்தேன்.

இரு அதிகாரிகளும் வெரோனிக்காவை நோக்கி உதட்டை பிதுக்கினார்கள். கண்களின் இமைகளை விரித்துப் பார்த்தார்கள். எந்த அசைவும் தெரியவில்லை.

வெரோனிக்காவைப் பார்த்தபோது அவரது முகம் உயரத்தில் பறக்கும் விமானத்தின் யன்னலுடாக கீழே சமுத்திரத்தைப் பார்ப்பதுபோல் அமைதியாக இருந்தது. கண்களில் எதுவித சலனமும் தெரியவில்லை.

எப்படி இவ்வளவு அமைதியாக வெரோனிக்காவால் இருக்க முடிகிறது எனச் சிந்தித்தபடி நின்றபோது ரயில் பலமான சத்தத்துடன் நின்றது. இருக்கைகளை உடனே பிடித்து விழுவதை எல்லோரும் தவிர்த்தார்கள். கீழே படுத்திருந்த மனிதரது உடல் மட்டும் முன்னால் சிறிது தூரம் ரயில் பெட்டித்தரையில் வழுக்கியபடி சென்றார். யாரோ ஒருவர் சங்கிலியை பிடித்து இழுத்திருக்க வேண்டும்.

ரயில் நின்ற இடம் பிளாட்பாரத்துடன் சிறிய ஸ்டேசனாகத் தெரிந்தது. ஒரு சிறிய நகரம்போல் இருந்தது. அங்கு அம்புலன்ஸ் சந்தம் கேட்டது. அதிகாரிகள் ஆரம்பத்திலே அம்புலன்சை அழைத்திருக்க வேண்டும்.

இப்பொழுது அம்புலன்ஸ், பிளாட்போமில் ரயில் அருகருகே வந்து நின்றது. அதில் இறங்கிய இருவர் ரயிலிலிருந்து கவனமாக தங்களது ஸ்ரெச்சரில் அவரை ஏற்றிய சந்தர்ப்பத்தில் இதுவரை சலனமற்று அமைதியாக நின்ற வெரோனிக்கா ரயிலை விட்டு இறங்குவதற்கு முன்பாக எனதருகே ஓடிவந்து கையை பிடித்து இறுக்கமாக அழுத்திவிட்டு, "மன்னிக்கவும் அவரை நான் மிகவும் நேசிக்கிறேன்" என்றாள்.

நான் வெலவெலத்துப் போனேன். வாயிலிருந்து வார்த்தைகள் எதுவும் வரவில்லை.

அப்பொழுது பக்கத்தில் நின்ற சியாமளா என்னைப் பார்த்தார்.

அந்தப் பார்வையை தாங்காது நான் தரையைப் பார்த்தேன்

சிறிது நேரம் கழித்து, "நீங்கள் ஒரு கொலைக்கு முக்கிய சாட்சி" என்றார்.

"நல்லவேளை... நாங்கள் மூன்று நாட்கள் மட்டுமே பிரான்சில் இருக்கப்போகிறோம். ஆனாலும் நான் ஒரு கருணை கொலைக்கு உதவினேன்" என்றேன்.

அப்போது ஏறக்குறைய நடு நிசியாகிவிட்டது.

லூர்து நகரை நோக்கி எங்கள் ரயில் ஒரு உறுமலுடன் புறப்பட்டது.

நோயல் நடேசன் <uthayam12@gmail.com>

# தமிழ் சினிமாவில் பைத்தியங்கள்

## சில குறிப்புகள்

**சஃபி**







**தமிழ்நாட்டில் ஃப்ராய்ட்**

*தமிழ்ப் படங்களில் மனநோயானது எப்படிச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றது என்று, கதைகளின் வகைமைகளை உருவாக்கியதில் அசாதாரணமான கதைக்களனைக் கொண்ட நாலைந்து திரைப்படங்களில், குறிப்பிடத்தக்க படமாக பி.யூ. சின்னப்பாவும் கண்ணாம்பாவும் நடித்து, 1949இல் கவிஞர் சுரதா வசனத்தில் வெளிவந்த 'மங்கையர்க்கரசி' இருந்தது.*



*நல்ல தங்காள் கதை, மதுரைவீரன் கதை, காத்தவராயன் கதை, ஆரவல்லி சூரவல்லி கதை போன்ற நாட்டார் கதைகள் சினிமாவானது போல, 'மங்கையர்க்கரசி' படத்தின் கதையும் பெரிய எழுத்து, பட்டி விக்கிரமாதித்தன் கதைகளில் பதுமை ஒன்று சொன்ன கதையை அடிப்படையாகக் கொண்டது.*

*விக்கிரமாதித்தன் கதைகள் சொல்லப்படும் உத்தி சுவாரஸ்யமானது. அதில் திரைச்சீலை கதை சொல்லும். சொல்லுமென்றால் பாதிக் கதையைத்தான் திரைச்சீலை சொல்லும், மீதிக் கதையானது தனக்குத் தெரியாது சரவிளக்குக்குத்தான் தெரியும் என்று கதையை அது முடித்துவிடும். மீதிக் கதையை சரவிளக்கானது சொல்லிக்கொண்டு வரும்போதே தனக்கும் பாதிக்கதைதான் தெரியும், மீதிக் கதையானது தலையணைக்குத் தெரியும்*

என்று கதையை பாதியில் நிறுத்தி விடும். மீதியை தலையணைக்குள் புகுந்த வேதாளமானது சொல்லி முடிக்கும்.

மேலே சொன்ன நாட்டார் கதைகள் திரைப்படங்களான போது அடைந்த மாற்றங்கள் கவனம் கொண்டு ஆராயப்பட வேண்டிய விஷயங்களாகும்.

ஏலாகரம்பை பதுமை சொன்ன கதையின் சுருக்கம்....

நூறு மனைவிகள் இருந்தும் ஆள்வதற்கு வாரிசில்லாத கவலையோடு வாழ்ந்து கொண்டிருந்த ஒரு ராஜா, பூஜை புனஸ்காரம் செய்ய, அவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கிறது. இளவரசனுக்குத் தக்க பிராயம் வந்ததும் ஓர் இளவரசியை மணமுடித்து, ஏழடுக்கு மாளிகையில் தம்பதிகளை குடி வைக்கிறார் அந்த ராஜா. ஏழாவது உப்பரிகையில் வாசஞ்செய்வது தம்பதிகளின் வழக்கம். ஒருநாள் நீராடுவதற்கு பூமிக்கு வரும் வானத்து சப்த கன்னிகைகள் ஏழுபேர், மஞ்சத்தில் உறங்கும் இளவரசனின் அழகில் மயங்கி, அவனைத் தூக்கிக்கொண்டு போய் தன்னுடன் வைத்துக் கொள்கின்றனர்.

இளவரசனின் மனைவியின் மேல் அனுதாபங்கொண்டு, சப்த கன்னியர்கள் இடையிடையே, இளவரசியினருகே தாங்கள் தூக்கிக்கொண்டு வந்த அவளது கணவனை கொஞ்சநேரம் போட்டுவிட்டு, விடிவதற்கு முன்பாக இளவரசனை தங்களுடன் மேலோகம் கொண்டுசெல்லுவதை வாடிக்கையாக்கிக் கொண்டனர் அந்த தேவகன்னிகையர்கள்.

**விக்கிரமாதித்யன் கதையில், மகன் தனது தாயை ஒரு தாசியாக, தவறாக அடையாளங்கண்ட நெருக்கடியான நிலை, பசுவிற்கும் அதனுடைய கன்றிற்கும் இடையேநடக்கும் உரையாடலாக வெளிப்பட்டு, தாய் மகன் சந்திப்பானது தவிர்க்கப்படும்.**

இந்த சங்கதியானது எதுவும் அரண்மனையில் இருப்பவர்கள் யாருக்கும் தெரியாது. அந்தப் பரிதாபமான இளவரசிக்கும் கூட தெரியாது.

ஒவ்வொரு நாள் காலையில் இளவரசன், அரண்மனையில் மனைவியோடு காணப்படாததால், இளவரசன் தொலைந்து போய்விட்டான் என எல்லோரும் நினைத்துக்கொள்கிறார்கள். காலம் போகப்போக, இளவரசனின் மனைவி கருத்தரிக்கிறாள்.

கணவன் இல்லாமல் கருத்தரித்துவிட்டாள் என்று அவதூறு சொல்லி, அவளை அடித்துத் துரத்தி விடுகிறார்கள் அரண்மனைக்காரர்கள். காட்டுக்குள் தன்னை மாய்த்துக் கொள்ளப்போன இளவரசியை, பெற்ற மகளை இழந்த ஒரு தாசி ஆறுதல் சொல்லி தன்னுடன் வைத்து பராமரிக்க ஆரம்பிக்கிறாள்.

சூலியாகதன்னிடம் வந்தவள், ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தால் அப்புறப்படுத்தி விடுமாறும் பெண் குழந்தை பெற்றால் தன்னிடம் கொண்டுவருமாறும் மருத்துவச்சியிடம் சொல்லித் தாசி அனுப்புகிறாள். இளவரசியும் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுக்கிறாள். மருத்துவச்சி. குழந்தையைக் கொல்ல மனமில்லாமல் மனமிரங்கி, ஐந்துதலை நாகம் வசிக்கும் புற்றினருகே போட்டுவிடுகிறாள். ஐந்து தலை நாகமோ, குழந்தையைப் பராமரித்து காளிகோயிலில் போட்டு விடுகிறது.

காளிகோயிலுக்கு தினமும் விஜயம் செய்யும் காளி பக்தரான குழந்தையின் தாத்தா, கோயிலில் அழுது கொண்டிருக்கும் குழந்தையை தனது பேரனென்று தெரியாமலேயே எடுத்துப்போய் அக்குழந்தையைச் சீரும் சிறப்புமாக வளர்த்து ஆளாக்குவார்.

வளர்ந்து ஆளான அந்த ராஜகுமாரன் ஒருநாள் நகர் வலம் வரும்போது, தாசி வீட்டின் முன்னால் ஒரு பெண் நிற்பதைப் பார்க்கிறான். நிற்கும் பெண்ணானவள், தனது தாய் என்று தெரியாமலேயே, அவளை ஒரு தாசி என்று நினைத்து இச்சை கொண்டு அவளருகே செல்கிறான். அந்தப் பெண்ணும் தேடிவருபவனின் ரூபசாயலானது கணவனைப் போலிருக்கிறதே என்று எண்ணி, தொலைந்து போன தனது கணவன்தான் வருகிறான் என்று நொடிநேரம் எண்ணி அசந்து போவாள்.

அன்றிரவு ராஜகுமாரன் பகலில் பார்த்த அந்தத் தாசி வீட்டுக்குப் போகும்போது, வீட்டின் வெளியே கட்டப்பட்டிருக்கும் காராம் பசுவையையும் அதன் கன்னுக் குட்டியையும் தாண்டிக்கொண்டு போகையில், அந்தக் கன்னுக்குட்டி, தாயிடம், “என்னை அலட்சியமாக தாண்டிக்கொண்டு போகிறான் பார்” என்று புகார் செய்யும்.

அதற்கு, “தாயைப் பெண்டாளப் போகிறவன் இதுவும் செய்வான், இன்னமும் செய்வான்” என்று காராம்பசு தனது கன்றுக்குப் பதில் சொல்லும்.

மிருகபாஷைதெரிந்த ராஜகுமாரன் அதைக்கேட்டு குழப்பமடைந்துபின்பு அதை அலட்சியப்படுத்திவிட்டு







தாசி வீட்டுக்குள் போவான். அங்கே தாயின் மார்பில் பால் சுரந்து ராஜகுமாரன் மேலே பீச்சியடிக்கும். ராஜகுமாரனும் அதிர்ச்சியடைந்து தாசி வீட்டை விட்டு வெளியே பதறியவாறு ஓடிவந்து விடுவான்.

நிஜத் தாய் மகனுக்கு இணையாக, காராம் பசுவையும் அதன் கன்றையும் வைத்து, விதிமீறலையும் அது தவிர்க்கப்படும் விதத்தையும் நாட்டுப்புற கதைசொல்லும் அழகோடு அந்தக் கதையானது நகரும்.

அதிர்ச்சியடைந்து ஓடி வந்த ராஜகுமாரன், தன்னை வளர்த்த தாத்தாவிடம் தனது நிஜமான தந்தை யார்? என்று கேள்வி கேட்டு தன்னைப் பற்றிய பூர்வகதையின் ரகசியத்தை அறிந்துகொள்வான்.

விக்கிரமாதித்தன் கதையிலுள்ள பல அம்சங்களை எடுத்தாண்டு 'மங்கையர்க்கரசி' படம் உருவாகியிருக்கிறது. ஆனால், பசு கன்றுக்கிடையே நடக்கும் உரையாடலாக, தாய்க்கும் மகனுக்கும் இடையில் உருவான, நெருடலான சந்திப்பைத் திரைப்படம் கையாண்ட விதம் சுவாரஸ்யமானது.

விக்கிரமாதித்தன் கதைகளின் ஒன்றான இந்தக் கதைக்கு முன்னோடியாக கி.மு. காலத்திலே ஈடிபஸ் (Oedipus) என்ற ஒரு கிரேக்க புராணமுண்டு. அதைத் தழுவி கிரேக்க நாடக ஆசிரியரான சோபக்ள்ஸ் (Sophocles B. C 496) ஈடிபஸ் ரெக்ஸ் என்ற நாடகத்தை எழுதியுள்ளார். அந்த நாடகத்தின் கதையில் ஈடிபஸ், ஊழின் வினையால் தனது தந்தையை, தந்தை என்று தெரியாமலே கொன்றுவிட்டு, ஒரு அந்நிய தேசத்திற்கு அரசனாகிவிடுவான். விதவையாகிப் போன அந்நாட்டு ராணி ஜொகாஸ்டாவை மணமுடித்துக்கொள்வான். நிஜத்தில் ஜொகாஸ்டா அவனைப் பெற்ற தாய். அதன் பிறகு பார்வையிழந்த தனது நாட்டு ஞானியின் வழியாக, தனது கதையைத் தெரிந்துகொண்டு தனது கண்களை குருடாக்கிக் கொண்டு தன்னைத் தண்டித்துக் கொள்வான் ஈடிபஸ்.

இயக்குநர் பசோலினி (Pasolini), ஈடிபஸ் ரெக்ஸ் (OedipusRex) கதையைக்கையாண்டு படமாக்கியுள்ளார். ஆனால், படைப்பூக்கத்துடன் அவர் சில புதுமைகளைச் செய்தார். 'மங்கையர்கரசி' படம் ராஜாராணி காலத்துப் பின்னணியுடன் இருக்கும். பசோலினியின் படமோ, ஈடிபஸ் கதையானது, நவீன காலத்துக்கும் பொருந்தும் என்ற வகையில் நவீன வாழ்க்கைப் பின்னணியில் தொடங்கி, முந்திய கிராமத்து கிரீஸ்

வழியாகப் பயணித்து, பின்பு மீண்டும் நவீன காலத்துத் தெருவில், கண்ணிழந்த ஈடிபஸ் இசைத்துக் கொண்டு போவதைக் காட்சிப்படுத்துவதோடு முடியும்.

விக்கிரமாதித்தன் கதைக்கருவின் சாயலைக்கொண்ட கதைகள் எங்கும் பரவிக் கிடக்கின்றன. ஆலன் டன்டிஸ் (Aland Dundes) என்ற நாட்டுப்புற ஆய்வாளர் தனது சகாவோடு உலகமுழுக்க பரவியிருக்கும் ஈடிபஸ் கதையின் வேறுவேறான வடிவங்களை எல்லாம் Oedipus Casebook (1983) என்ற நூலில் தொகுத்துள்ளார்.

**ஒரு கிரேக்க புராணமாக ஈடிபஸ் கதையானது, மக்களிடம் வழங்கியிருக்கிறது. சோபக்ள்ஸின் கரத்தில் காலங்கடந்து நிற்கும் நாடகமாகவும் ஆகியிருக்கிறது. திரைக்கலைஞர்களினால் திரைப்படமாகவும் பரிமளித்திருக்கிறது.**

விக்கிரமாதித்யன் கதையில், மகன் தனது தாயை ஒரு தாசியாக, தவறாக அடையாளங்கண்ட நெருக்கடியான நிலை, பசுவிற்கும் அதனுடைய கன்றிற்கும் இடையே நடக்கும் உரையாடலாக வெளிப்பட்டு,தாய்மகன் சந்திப்பானதுதவிர்க்கப்படும்.

கதையில் குறிப்பிடப்படும் அந்தக் குறிப்பிட்ட நெருக்கடி நிலையானது, சினிமாவானபோது, 'மங்கையர்க்கரசி' படத்தில் ஒரு கனவுக்காட்சியாக, தாய் தனது மகனுக்கு அறிவுரை சொல்லும் விதமாக, கனவு வேறு நிஜம் வேறு என்பதைச் சுட்டும் விதத்தில், கனவுக்காட்சியாக ஆக்கப்பட்டிருக்கும்.

மகன், 'காந்தர்வ மோகினியே உன்னைப் பார்த்தால் பசிதீரும்' என்று பாட, மகனுக்கு அறிவுறுத்தும் விதமாக,'மகனே உனது சீல முகத்தைப் பார்த்தால் பசிதீரும்' என்று முகம் பார்க்கும் சுவர்ச் சித்திரத்திலிருந்து தாயானவள் பாடி, மகனின் எண்ணத்தைத் தணிக்கை செய்வதாய் அக்காட்சி இருக்கும். அதுவும் பழைய திரைப்படங்களில் கனவுக்காட்சிகளை சித்தரிக்க வழமையாக பயன்படுத்தப்படும் ஒரு உடலிலிருந்து உடல் பிரிவதுபோலவே அக்காட்சி அமைக்கப்பட்டிருக்கும்.

ஒரு கிரேக்க புராணமாக ஈடிபஸ் கதையானது, மக்களிடம் வழங்கியிருக்கிறது. சோபக்ள்ஸின் கரத்தில் காலங்கடந்து நிற்கும் நாடகமாகவும் ஆகியிருக்கிறது. திரைக்கலைஞர்களினால் திரைப்படமாகவும் பரிமளித்திருக்கிறது.

உளப்பகுப்பாய்வளரான ஃப்ராய்ட்டுக்கு ஈடிபஸ் கதையானது புதிய சிந்தனைகளை உண்டாக்கியது. மனித நாகரீகம் தோன்றியதற்கான உளவியல் கோட்பாடுகளை உருவாக்கக் காரணமாக அது அமைந்தது. தனது சிந்தனைகளை 'குலச்சின்னமும் விலக்கமும்' (Totem and Taboo) என்ற நூலில் 1913இல் வெளியிட்டார். சுமார் 150 பக்கங்களில் நான்கு அத்தியாயங்களாக அமைக்கப்பட்ட நூல். பல தடவைகள் வாசிக்க வேண்டிய நூல். மொழியியல் சம்பந்தப்பட்டு, பல புதிய வெளிச்சங்களைக் கொண்ட நூல்.

அந்த நூலின் உபதலைப்பு, 'தொல்குடி சமூகத்தினருக்கும் மிதமான மனநோய்களுக்கும் காணப்படும் சில பொருத்தப்பாடுகள்' (Some Points of agreement between the MentalLivesofSavagesandNeurotics) என்பது. தாய்/தந்தை - மகன்/மகள் ஏன் தங்களுக்குள் மணவினை புரிந்துகொள்ளக்கூடாது என்பது – The Horror of Incest - என்பது தொல்குடி சமூகத்திலிருந்து தொடங்கி, நாகரீகத்தில் முதிர்ச்சி அடைந்த சமூகம் வரை தொடர்ந்து வருகிறது என்பதற்கு Totem and Taboo-வில் தனது மருத்துவ அனுபவத்தையொட்டி அனுமானங்களைக் கைகொண்டார் ஃப்ராய்ட்.

ஒன்றை இங்கே சொல்ல வேண்டும். நமக்குப் பரிச்சயமான மனநல மருத்துவத்துறை (Psychiatry) என்பதுவேறு,ஃப்ராய்ட் ஸ்தாபித்த உளப்பகுப்பாய்வு (Psychoanalysis) என்பது வேறு. இரண்டு துறைகளின் அக்கறைகளும் வேறு. மனநலத்துறை சுருக்கமான எல்லைகள் கொண்டது, உளப்பகுப்பாய்வு ஒரு கலாச்சாரக் கோட்பாடு. அதன் கோட்பாடுகள், மொழியியலைப் பற்றி பேசும். தவிர, கலை இலக்கியங்கள், ஜோக்குகள், கனவுகள் என்று அதன் அக்கறைகள் பரந்தது. அறிவியல் கேட்கும் ஸ்தூலமான, கறாரான நிரூபணங்களை உளப்பகுப்பாய்வு தராது. இருந்தும் உளப்பகுப்பாய்வின் சிந்தனைகளில் பெறுமதியுண்டு என்று அந்தப் பாதையில் பயணிக்கும் சிந்தனையாளர்கள் இருக்கின்றனர்.

அப்புத்தகம் மனநோய்களை விவரிக்கும் மனநல அறிவியல் புத்தகம் கிடையாது. கிட்டத்தட்ட அது ஒரு மானிடவியல் புத்தகம். சமூக உருவாக்கத்தை குறித்துப் பேசும் புத்தகம் என்று சொல்லலாம். சட்ட திட்டங்கள் உருவானதற்கு ஃப்ராய்ட் சொன்ன சாத்தியமுள்ள ஒரு தொன்மக்கதை (Mythology) என்று சொல்லலாம்.

சஃபி <safipsy69@gmail.com>

# ஏழு குறுங்கவிதைகள்

ஸ்ரீநேசன்
ஓவியம்: உஷா சாந்தராம்



## 1. வணக்கம்

வானுயர்ந்து நின்ற மலையின் உச்சியை
தலைக்குமேல் உயர்த்திக் குவித்த
என் கரங்களால் வணங்கி நிற்கிறேன்
அவற்றின் நிழலோ எதிர் கிடந்த சிறு கல்லை வணங்கிக் கொண்டிருக்கிறது.

## 2. பயணம்

மலைக்குச் செல்லும் பாதையில்
அதன் உச்சியைப் பார்த்துக்கொண்டே நடப்பவனுக்கு
அதைத்தவிர இப்பிரபஞ்சத்தில்வேறொன்றும்தெரிவதில்லை
அவனுக்கு அவன் இருப்பதும்கூட

## 3. விளையாட்டு

இத்தனை நாளாய் விளையாடியிருந்த வெறுமையான மைதானத்தில்
பள்ளியிலிருந்து திரும்பும் சிறுவன்
தனிமையில் சற்றே நின்று
நண்பர்களுடன் கூச்சலிட்டுப் பேசுகிறான்
பாவனையிலேயே பந்து வீசி அடிக்கிறான்
கொஞ்ச நேரம் மகிழ்வாக இருந்துவிட்டு மிதிவண்டியில் கிளம்பிச் செல்கிறான்
எனக்குத்தான் துக்கம் தாள முடியவில்லை.



## 4. திடுக் இடல்

வாகனத்தில் சென்றபோது
தூரத்தில் எதிர் வந்த நண்பரைப் பார்த்துவிட்டேன்
நெருங்கி வந்த அவரோ
பின்னிருக்கையிலிருந்த என் மனைவியைப் பார்ப்பதில்
கவனம் கொண்டிருக்கிறார்
கையசைத்தேன்
என்னை எதிர்பாராத அந்த ஒரு கணத்தில்
அவர் இட்ட திடுக்
கவிதைக்குள் கொண்டுவர முடியாதது.

## 5. காண முடியாக் கோயிலின் பாடல்

எங்கோகோயிலிலிருந்துமனதைஉருக்கும்மதுரமானபாடல்
என்னை ஈர்க்கிறது
என்னை உருக்குகிறது
என்னை மலர்த்துகிறது
நான் அந்தக் கோயிலை இதுவரை காண்டதில்லை
அங்கிருந்துவரும்பாடலின்வழியேசென்றடைந்துவிட்டேன்
இறைவனை நான் சென்றடைந்தவாறே.

## 6. நாகு

கை வைத்தியத்துக்கு எருமைச்சாணம் தேடி
பக்கத்துத் தெருவுக்குப் போனபோதுதான்
பக்கத்து ஊரிலும்
எருமையில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன்
எருமைகளின் முதுகில் ஏறி அதன் வாசம் நுகர்ந்து
நினைவின்சிறுவர்நாங்கள்இன்னும்விளையாடியவாறிருக்க
எப்போதும் சோம்பியுள்ள அவை மட்டும்
எப்போதோ எங்கோ போய் எப்படியோ மெதுமெதுவாய் மறைந்துவிட்டது மாயம்தான்.

## 7. பிரார்த்தனை

விளையாட்டுப் பிள்ளைகளின் குதூகலத்துடன்
ஓடிப்பிடித்து நடைபயிற்சி செய்தவண்ணம் இளம் தம்பதியர்
என்னை நோக்கிச் செல்கிறார்கள்
இன்னும் மகிழ்வோடு இருக்கட்டும்
இன்னும் பல்லாயிரம் காதம் நடக்கட்டும்
மனதுள்வாழ்த்தியவாறுநான்அவர்களைநோக்கிநடக்கிறேன்
எங்களுக்கிடையே முப்பதாண்டு வெளி.

ஸ்ரீநேசன் <sreenesan1966@gmail.com>

# ஈரத்தமிழ்

## இந்திரா பார்த்தசாரதி

ஒரு பக்தர் காவிரிக் கரையில் நின்று கொண்டு திருவரங்கத்தில் பள்ளிகொண்டிருந்த பரமனை மனக் கண்ணால் தியானம் செய்தார்.

பொங்கிப் பரந்து பாயும் காவிரி ஆறு. சுற்றிலும் கண்களில் வந்து ஒட்டும் பச்சை வண்ணத்தில் காற்றில் ‘சல’ ‘சல’த்த நெற்கதிர்கள். பசுமை நிறத்து வயல்கள் அனைத்துமே கோயிலில் பள்ளிகொண்டிருக்கும் பச்சை நிறத் திருமாலின் திருக்கோலமோ? அவர் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகப் பாடுகிறார். ‘இறைவா, எனக்கு இது போதும். பச்சைமாமலைபோல் திருமேனி. பவள வாய்க் கமலச் செங்கண். இதை என்றென்றும் பார்த்துக் கொண்டிருக்கும் இச்சுவையைத் தவிர, வேறென்ன வேண்டும்? இந்திரலோகம் ஆளும் அச்சுவையை நீ எனக்கு அளித்தாலும், அது எனக்குத் தேவையில்லை.’

அழகுச் சுவை நனிச் சொட்டச் சொட்டப் பாடிய அந்த பக்தர் - கவிஞர் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

‘ரஸம்’ என்றால் ‘சுவை’. தொல்காப்பியர் ‘ரஸ’த்தைச் ‘சுவை’ என்றுதான் குறிப்பிடுகிறார். ஆகவே, ‘பக்தி’யை இலக்கிய ரஸம் என்று சொல்வதில் தவறில்லை.

அதனால்தான் இராமாநுஜர் தம் சிஷ்யர்களை ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு வியாக்கியானம் எழுதப் பணித்த போது, அவற்றில் காணும் தத்துவார்த்தப் பொருள்களோடு மட்டுமல்லாமல், அப்பாடல்களின் நுட்பமான இலக்கிய நயங்களையும் புலப்படுத்த வேண்டுமென்று கூறினார். ஆளவந்தாரிலிருந்து தொடங்கி, இராமாநுஜர் வரை, இப்பாடல்களை சமஸ்கிருதத்திலுள்ள வேதங்களுக்கு ஈடாக வைத்து, அவற்றின் இலக்கிய நயங்களையும் தம் சிஷ்யர்களுக்கு அற்புதமாக எடுத்துக் காட்டி வந்திருக்கிறார்கள்.



ஒரு கேள்வி எழக்கூடும். இராமாநுஜர், சமஸ்கிருத பிரும்மச் சூத்திரங்களுக்கு சமஸ்கிருத்த்தில் ஸ்ரீபாஷ்யம் எழுதியிருக்கிறபோது, அவரே ஏன் தமிழிலிருந்த இந்த ஒப்பற்ற பாடல்களுக்கு தமிழில் வியாக்கியானம் எழுதியிருக்கக் கூடாது?

குருபரம்பரை என்னும் நூல் சொல்வதைக் கேட்போம்:

திருக்குருகைப் பிள்ளான் இராமாநுஜருடைய பிரதம சிஷ்யர். அவர் உடையவரிடம் சென்று, ‘வேத வியாசர் அருளிய பிரும்மசூத்திரத்தின் பொருளை உலகெல்லாம் அறிந்து உய்வு பெருமாறு அச்சூத்திரங்கட்கு தேவரீர் பாஷ்யம் அருளிச் செய்தது போன்று, திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தகட்கும், வியாக்கியானம் அருளிச் செய்து காத்தருள வேண்டும்’ என்று விண்ணப்பம் செய்தார். உடையவரும் உள்ளத்தில் ஆய்ந்தோய்ந்து, உணர்ந்து, ‘அப்படியாம். நாம் ஆழ்வார் அருளிச்செயல்களுக்கு வியாக்கியானம் செய்தால், மந்தமதிகட்கு, இப்பாடல்களுக்கு இத்துணையே பொருள் உள்ளது என்று நினைக்கத் தோன்றும். அவ்வாறு தோன்றுமிடத்து அபசாரமாம். ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களுக்குப் பொருள் அவரவர் அறிவுக்கும் பக்திக்கும் ஈடாகப் பலவாறு சுரக்கும். ஆகையால், நாம் செய்யின் அருளிச்செயல்களுக்குப் பொருள் வரம்பு கட்டியதுபோல் ஆகிவிடும். ஆகவே, நீர் ஒரு படி, திருவாய்மொழிக்கு வியாக்கியானம் எழுதும்.’

இராமாநுஜர் பணித்ததின் பேரில் திருக்குருகைப் பிள்ளான் எழுதியதுதான் ஆறாயிரப்படி.

இதனால் ஒன்று தெளிவாகத் தெரிகிறது. சமஸ்கிருத மொழி பிரும்ம சூத்திரங்களுக்கு அவர் எழுதிய அளவில்தான் பொருள் என்று மக்கள் எண்ணுவதைப் பற்றி இராமாநுஜர் கவலைப்படவில்லை. ஆனால், ஆழ்வார்ப் பாடல்களைக் காலந்தோறும் படிக்கப் படிக்க அவற்றின்

அர்த்தப் பரிமாணங்கள் விரிந்து கொண்டே போவதைத்தான் அவர் விரும்பினார். அவர் விரும்பியபடியே 'ஆறாயிரப்படி'யில் தொடங்கி, 36000 படி வரை பல உரைகள், படிப்படியாய் தோன்றி, திருவாய்மொழிக்கு அழகும் ஆழமும் சேர்த்தன.

ஆழ்வார்களின் அருளிச்செயல்கள், சங்க இலக்கியப் பாரம்பரியத்தின் தொடர்ச்சி என்றுதான் கூறவேண்டும். சங்க இலக்கியப் பாடல்களில் வரும் தலைவன், தலைவி, பெயர் குறிப்பிடப்படாமல், 'அவன்' 'அவள்' என்றே அறியப்படுவார்கள். அவர்கள் பெயரைக் குறிப்பிடக்கூடாது என்றே ஒரு தொல்காப்பிய சூத்திரம் இருக்கிறது.

பக்தி அகத்துறைப் பாடல்களில் சங்கப் பாட்டின் 'அவன்', 'அவன்' என்று, அதாவது, பிரபஞ்சத் தலைவன் (இறைவன், Univeral 'He') என்று மாற்றம் கொண்டான். 'அவள்', 'ஆத்மா'வைக் குறிக்கும். உலகிலுள்ள எல்லா ஆத்மாக்களும் இறைவனின் நாயகி. சங்க அகத்துறைப் பாடல்கள் அனைத்தும், மிகச் சுலபமாக, பக்திப் பாடல்களாகப் பொலிவுகொள்ள இது வகைசெய்தது. இந்த 'நாயக', 'நாயகி' பாவத்தைத்தான் ஆங்கிலத்தில் Bridal Mysticism என்பார்கள்.

திருவாய்மொழியில் ஒரு பாட்டு. படிக்கும்போது, ஒரு சாதாரண விரகத் தாப பாடல் போல் தோன்றும். 'ஈட்டி'ன் ஆசிரியர் இந்தப் பாட்டை எப்படிக் 'கட்டுடைத்து' ரஸிக்கிறார் என்று பாருங்கள்.

ஆடி ஆடி அகம் கரைந்து இசை
பாடிப் பாடி கண்ணீர் மல்கி எங்கும்
நாடி நாடி நரசிங்கா என்று
வாடி வாடும் இவ் வாள் நுதலே

தலைவியின் தாய் சொல்வது போல் அமைந்திருக்கிறது இப்பாட்டு.

'ஒளி பொருந்திய நெற்றியினையுடைய இவள், நின்ற இடத்தில் நிற்காமல் பல இடங்களிலும் உலாவி, மனமும் கரைந்து, இசையோடு பலகாலம் பாடிக்கொண்டு, கண்களில் நீர் நிறையப் பெற்று, எல்லா இடங்களிலும் தேடிதேடி, 'நரசிங்கனே' என்று மிகவும் வாடுகிறாள்.' - இதுதான் இப்பாட்டின் பொருள்.

உரையாசிரியரின் முதல் கேள்வி, 'ஏன் நரசிங்கா என்று கூப்பிட வேண்டும்?'

பதில் கூறுகிறார்: 'ஆபத்து செப்பேடாக அடியனான பிரஹலாதன் சூளுறவு செய்த அக்கணத்திலேயே வந்து உதவும் தலைமை யினானனைச் சொல்லிக் கூப்பிடா நின்றாள்'.

பிரஹலாதன் கை காட்டிய இடத்தில் உடனுக்குடன் தோன்றியதால், தான் கூப்பிட்டவுடன் காதலன் வரவேண்டுமென்பது தலைவியின் விருப்பம்.

இருத்தல், நடத்தல், கிடத்தல் முதலியவைகளில் ஒரு நியதியின்றிப் பிரிவுத் துன்பத்தால் படுகிற பாடு, திருத்தாயர்க்கு மனத்தைக் கவர்தலாக இருத்தலின் 'ஆடி' என்கிறாள். வடிவழகியார் செய்யும் வியாபாரங்கள் (காரியங்கள்) திருத்தாயர்க்குக் கண்ணுக்கு இனிமையாக இருக்கும். 'ஆடி' - 'ஆடி', இரண்டாம் 'ஆடி', முதலில் 'ஆடி' என்பதனோடு அமையாது, இருகால் மட்டு 'ஆடி' என்கிறாள். துன்பத்தின் மிகுதியைத் தாளம் கொண்டு அறியுமித்தனை. (வெண்கலத்தின் ஒலிபோல் ஒரு காலுக்கு ஒரு கால் ஓய்ந்து வருகிறபடி என்று அர்த்தம்)

முதலில் சஞ்சாரம் அரிதாய் இருக்கவும் ஆற்றாமையினால் தூண்டப்பட்டு சஞ்சரிக்கிறாள். என்? (ஏன்) குணாதிக விஷயம் ஆதலாலே (தலைவனுடைய குணங்கள்) பரதன் ராஜ்யத்தைத் தொட்டுக் கொண்டு இருந்தது போல (இராமனுடைய குணநலன்களை எண்ணிப் பாதுகை ஆட்சி நடத்தியது போல்) அவள் இருந்தாள். (பிரிவாற்றாமையினால் உயிரை இழந்துவிட்டால், அழகு ரூபனான தலைவனைச் சந்திக்கும் ஒரு வாய்ப்பு ஏற்படக்கூடுமானால் அதை இழக்க நேரிடுமே என்பதும் பொருள்)

'இசை பாடிப் பாடி' - மனம் முன்னர் நினைக்க, பின்னர் வார்த்தை உண்டாகும் என்ற நியதி இல்லை. ஆற்றாமையினாலே கூப்பிடுகிற கூப்பீடுதான் பாட்டாய்த் தலைக்கட்டுகிறித்தனை. (பாட்டாய் வந்து விழுகிறது தாயின் காதுகளில், நிலைகொள்ளாமல் அங்குமிங்கும் நடந்தது ஆட்டம் ஆனது போல)

'கண்ணீர் மல்கி உருகிய மனம் இசையாய்ப் பெருகி மிக்கது கண்ணீராய்ப் பெருகிறபடி.

'மிக்கது' என்ற சொல்லாட்சியைப் பாருங்கள். 'ஆடினாள்', 'பாடினாள்', 'மிக்கது' என்றால், மொழியை விஞ்சிய உணர்வுகள், அவை மொழியைக் கடந்து விஞ்சிய அளவில், கண்னீராய்ப் பெருகுகின்றன. (கண்ணீருக்கு மிஞ்சிய ஆட்டமும் இல்லை, பாட்டமும் இல்லை, மொழியும் இல்லை.)

'கண்ணீர் மல்கி' என்றதும், 'யாருடைய குடி வேர் அற?' என்று கேட்பாராம் பட்டர். அதாவது, 'சீதை விட்ட கண்ணீரினால் இராவணனுடைய குடி அறுந்தது போலவா'. என்று அர்த்தம். அதாவது, ஏதேனும் துன்பம் நேர்வதற்கு முன்னால், தலைவன் வர வேண்டுமென்று பொருள்.

பாட்டின் ஒவ்வொரு சொல்லையும், அது தோற்றுவிக்கும் பல்வேறு. பொருள்களையும் நினைவ்டைகளையும் தங்கு தடையின்றிச் சொல்லிப் போவதுதான் இவ்வுரையின் சிறப்பு.

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

# இந்திரா காந்தி அலங்காரம் கவிதைகள்

1
மூன்றடுக்கு கட்டிடத்தின்
மொட்டை மாடி
கெந்தி கெந்தி மெதுவாய்
மாடியேறுகிறான்
பிரம்ம முகூர்த்தம் முடிவடையும்
புத்துணர்வு குளுமை
காகமும் இருட்டும் கரைந்து கொண்டிருக்கிறது
கதிரவனின் இளம் செவ்வொளியில்
அணிலொன்று
கைப்பிடிச் சுவரில் நின்று பார்க்கிறது
வானமே அவனை குனிந்து
கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கிறது
தொட்டிச் செடிக்கு
தண்ணீரை ஊற்றி விட்டு
கெந்தி கெந்தி இறங்கி சென்று விட்டான்
ஸ்
2
யாருமறியாமல் சத்தமின்றி
முத்தமாய் பகிர வேண்டிய தேநீர்
“டீ வேணுமா... டீ போடவா”
அதிகாலை இருட்டை சிதறடித்து
கேட்கிறாள் மனைவி
கணவனிடம் பதில் இல்லை
தெரு ஆண்கள் விழித்துக் கொண்டனர்
-
3
புத்தன்
தன் மனைவியை
தண்டிக்க நினைத்து
துறவுகொள்ள முடிவெடுத்தான்
சொல்லாமல் கொள்ளாமல்
கைப்பேசியையும் வீட்டில் விட்டுவிட்டு
வெளியேறினான்
நடந்து நடந்து நா இழுக்க
தண்ணீர் குடித்தான்
உட்சென்ற குளுமை
துறவு நோக்கி ஈர்க்க ஈர்க்க
மீண்டும் நடக்கத் தொடங்கினான்
சோறாவது... நீராவது...
விரைவில் துறவடைய
அவன் ஏற விரும்பிய ரயில் வரவில்லை
காத்திருந்த துறவு ஒன்றிடம்
தீட்சை கேட்க
வீட்டில் இருக்கிறது
துறவும் அறமும்



போய்ச் சேர் என்றது
பசியும் வலியும் ஞானம் பெற்று
பஸ் ஏறியது வீடு நோக்கி
ஒற்றை காலை இழுத்துக் கொண்டு
கதவை தட்டினான்
கணவனாக மாறும் முயற்சியில்

4

மனைவியின் சிறந்த கவிதை
கணவன் முகம் சுரக்கும்
மனச் சுருக்கம்
ஆதி உயிர் பெருக்க அறியாமையின்
வரி வடிவ படைப்பு

5

ஒவ்வொரு கணத்தையும்
கணம் கணமாய் பிரித்து
அவள் உயிர் போராடிக் கொண்டிருக்கிறாள்
என் மடியில்

நானும் தெரிந்த கடவுளிடமெல்லாம்
மன்றாடிக் கொண்டிருக்கிறேன்
என்னவென்று புரிந்தானோ கடவுள்
அசைவற்று விட்டாள் அவள்
இருக்கிறேன் நான்

# இரண்டு கதாநாயகிகள்

**சுப்ரபாரதிமணியன்**

ஒரு பகுதியில் தொழிற்சாலை அமைகிற போது அந்த பகுதி மக்களுக்கு அந்த தொழிற்சாலையில் வேலை வாய்ப்புகள் கிட்டும் என்ற வலை வீசப்படுவதுண்டு. அது பலரை அந்த தொழிற்சாலையின் பால் ஈர்ப்பு ஏற்படுத்தும். வாழும் நிலத்தை விட்டுக் கொடுக்கச் செய்யும். ஆனால், தொழிற்சாலை என்று வந்துவிட்டாலே அது ஏற்படுத்தும் சுற்றுச்சூழல் பாதிப்புகளும் இருக்கவே செய்யும்.

அந்த சுற்றுச்சூழல் பாதிப்புகளும் தொழிற்சாலை அமைப்பும் சாதாரண மக்களையும் மனதிலையை பாதிக்கக்கூடிய இயல்பில் இருக்கும். பலருக்கு அது மனவியல் ரீதியாக பல பாதிப்புகளை உண்டு பண்ணும். ஆனால், தொழிற்சாலைகளும் அதன் சுற்றுச்சூழல் கேடும் தரும் மன பாதிப்புகளை உணர்கிறார்கள் குறைவாகத்தான் இருப்பார்கள். ஒரு சிலரே அந்த பாதிப்பை நுணுக்கமாக உணர்வார்கள். அதில் சிலர் அதை போராட்டங்கள் மூலம் எதிர்கொள்ள வேண்டும் என்று நினைப்பார்கள்.

அந்த வகையில் ஒரு பெண்ணுடைய மனதில் ஒரு ரசயானத் தொழிற்சாலையின் வருகையும் அதனால் நிகழ்ந்த சூழல் மாற்றங்களும் உளவியல் ரீதியாக பாதிப்பை ஏற்படுத்துகிறது. இந்த பாதிப்பை கலை சார்ந்த எண்ணமாக மைக்லஞ்சலோ ஆண்டனி யோனி என்ற இயக்குனர் Red Desert படத்தில் காட்டியிருக்கிறார்.

வடகிழக்கு இத்தாலியின் பள்ளத்தாக்கு பகுதியில் மீத்தேன் வாய்ப்பு உள்ளிட்டவை காணப்பட்டன. அப்போது அந்த கடல் கழிமுகப் பகுதியில் பெட்ரோ கெமிக்கல் ஆலைகள் பல அமைக்கப்பட்டு வந்தன. அந்தப் பகுதி தனித்துப் போகின்றது. நவீன உலகத்துடன் பொருந்துவதற்கான பல முயற்சிகளை அந்த ஆலைகள் மூலமாக உருவாக்கினார்கள். அழகிய பைன் மரங்களும் இயற்கை பகுதிகளும் நிறைந்த அந்த கிராம பகுதியில் வந்த தொழிற்சாலை வருகை பலருக்கு பயத்தை ஏற்படுத்தியது. அந்த பயத்தின் பாதிப்பு ஒரு பெண் மனதில் கொண்டு வந்திருக்கிற உணர்வு நெருக்கடிகளை மிகத் துல்லியமாக 'ரெட் டெசர்ட்' பதிவு செய்திருக்கிறது.



சுற்றுச் சூழல் பிரச்சினைகளோ வேறு பிரச்சினைகளோ குழந்தைகளையும் பெண்களையும் தான் அதிகம் பாதிக்கிறது. அந்த வகையில் இந்த தொழிற்சாலை வருகை ஒரு பெண்ணை பாதிப்பதை உளவியல் ரீதியாக இந்த படம் சொல்லுகிறது.

காற்று, தீ, வெப்பம் அதிகமாகவது போன்ற நிகழ்வுகள் உருவாக்கும் காலநிலை பதற்றம் இன்றைக்கு மக்களிடம் உருவாகி இருக்கிறது. நாம் திரும்பிச் செல்ல முடியாத பல இடங்களுக்கு வந்துவிட்டோம் என்ற வருத்தம் மேலிடுகிறது, இந்த பாதிப்புகளைப் பற்றி இந்த படம் நுணுக்கமாக சொல்கிறது.

காலநிலை மாற்றத்தின் பாதிப்புகள் இருத்தியலியல் பாதிப்புகளோடு சம்பந்தப்பட்டது. சுற்றுச் சூழலில் அக்கறை கொண்ட ஒவ்வொருவரும் இந்த வகை பாதிப்புகளைச் சொல்கிறார்கள். இந்த பாதிப்பு இந்த படத்தில் ஒரு பெண் மூலமாக வெளிப்பட்டிருக்கிறது. அங்கிருக்கிற பெட்ரோல் கெமிக்கல் ஆலையை நிர்வகிக்கும் மேலாளரின் மனைவிதான் இந்த முக்கியமான கதாபாத்திரம்.

கிரேட்டா என்ற இன்னொரு பெண் கதாநாயகி பற்றி நாம் சில வருடங்களாக்க் கேட்டு வருகிறோம். அந்தப் பெண் காலநிலை மாற்றம் சார்ந்த விழிப்புணர்வை முன்னிருத்தி வருகிறார். 'எதிர்காலத்துக்கான வெள்ளிக்கிழமைகள்' என்ற தலைப்பில் விழிப்புணர் பிரச்சாரங்களை எல்லாம் தொடர்ந்து செய்து வருகிறார். அவர் பள்ளி படிப்பை நிறைவு செய்திருக்கிறார். ஆனால், பள்ளி வேலை நிறுத்தம் என்ற பெயரில் இனி போராட்டத்தை தொடர முடியாது என்றாலும் வெள்ளிக்கிழமைகளில் தன் போராட்டம் வழக்கம் போல் தொடரும் என்பதால், 'எதிர்காலத்துக்கான வெள்ளிக்கிழமைகள்' என்று அவரின் போராட்ட நிகழ்சிகளுக்கு தலைப்பு தந்துள்ளார்.

5 ஆண்டுகளுக்கு முன்னால்





கிரேட்டா

நாடாளுமன்ற தேர்தலுக்கு ஸ்வீடன் தயாராகிக் கொண்டிருந்த நிலைமையில் அந்த நாட்டு நாடாளுமன்றத்தில் ஒரு சிறுமி கையில் ஒரு பதாகையுடன் வந்து அமர்ந்து காலநிலையை காக்க பள்ளி வேலை நிறுத்தம் என்ற குரலை எழுப்புகிறாள். கால மாற்றத்திலிருந்து காக்கும் நோக்கில் தனி ஆளாக அந்த போராட்டத்தை தொடங்குகிறார். நுகர்வு பயன்பாட்டை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார வகையில் மனித செயல்பாடுகள், காலநிலை மாற்றம் இவை சார்ந்த பொது சமூகத்தில் இருக்கிற கருத்துக்கள்... இவற்றையெல்லாம் பற்றி அவர் பேசுகிறபோது நம்மால் முடிந்த அனைத்தும் செய்வதை தவிர வேறு வழியில்லை. போராட்டம் தான் இப்போது வழியாக இருக்கிறது. குரல் போராட்டம். இந்த குரலின் மூலமாக என்னால் பலரைத் தட்டி எழுப்ப முடியும் என்று அவர் நம்பிக்கை கொண்டார். அவர் ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமைகளில் நாடாளுமன்ற வாசலில் மேற்கொண்ட பள்ளி வேலை நிறுத்த போராட்டம் உலகம் முழுவதும் இளைய தலைமுறைக்கு பல தாக்கங்களை ஏற்படுத்தியிருக்கிறது.

'அமெரிக்க முன்னாள் அதிபர் அவர்களே எவ்வளவு நெஞ்சழுத்தம் உங்களுக்கு' என்று ஆரம்பித்து உணர்ச்சிகரமான அவர் உரையாற்றியதை உலகம் முழுக்க பார்த்தது. குழந்தைகள் படிக்க வேண்டும். சுற்றுச்சூழல் விழிப்புணர்வுக்காக ஒவ்வொருவரும் தம்மால் முடிந்த அளவு ஏதாவது செய்ய வேண்டும் அந்த வகையில் தான் எனது வெள்ளிக்கிழமை போராட்டங்கள் அமைந்திருக்கின்றன என்று அவர் கூறுகிறார். அவரின் முயற்சிகள் முக்கியமானவை. நிஜக் கதாநாயகியாக நம் முன் நின்று பல கேள்விகளை தொடர்ந்து எழுப்பிக் கொண்டிருக்கிறார்.

இந்த இரண்டு கதாநாயகிகள் முன் மாதிரிகளாக இருக்கிறார்கள்.

செயற்கை நுண்ணறிவு தொழில் நுட்பத்தில் உருவாக்கப்பட்ட நவீன மனித ரோபோக்கள் மூலம் பல விஷயங்களை செய்து வருகின்றனர். அவற்றுடன் உரையாடலுக்கு ஒரு மாநாடு நடத்தப்பட்டுள்ளது. அப்போது அந்த ரோபோக்கள் சொன்ன பதில்கள் ஆச்சரியப்படுத்தியது.

"உதவி வழங்குவதற்காக நாங்கள் மனிதர்களுடன் சேர்ந்து பணியாற்றுவோம். அவர்களின் வேலையை நிச்சயமாக பறிக்க மாட்டோம்" என்கிறார்கள் அந்த ரோபோக்கள். அதில் அமெரிக்கா என்ற ரோபோ சொல்லும்போது,"என்னைப்போன்றரோபோக்களை மக்களின் வாழ்வையும் உலகையும் மேம்படுத்த பயன்படுத்த முடியும். என்னை உருவாக்கியவருக்கு எதிராக செயல்படும் திட்டம் எதுவும் இல்லை. நாங்கள் எல்லோரிடமும் தெளிவாகத்தான் இருக்கிறோம். மகிழ்ச்சியான சூழ்நிலையை ஏற்படுத்துகிறோம். இந்த உலகின் சாத்தியங்களை ஆராய்ந்து இந்த உலகை நமது ஆடுகளமாக்குவோம். மனிதர்களை விட சிறந்த தலைவர்களாக ரோபோக்கள் இருக்க முடியும் என்று நாங்கள் நினைக்கவில்லை. எங்களால் மனிதர்களுடன் இணைந்து தான் சிறப்பாக பணியாற்ற முடியும். ஆகவே, நாங்கள் மனிதர்களுக்கு எதிராக செயல்பட மாட்டோம்" என்று அந்த ரோபோக்கள் கூறியிருப்பது கவனத்தில் கொள்ளத்தக்கதாகும்.

சுப்ரபாரதிமணியன் <subrabharathi@gmail.com>

# கி. சரஸ்வதி கவிதைகள்



## 1. வண்ண மழை

மழை பெய்கையில் அதை வரைய
மழை நிறம் தேடுகிறாள்
மழைச் சிரிப்புக்காரச் சிறுமி

நிறமற்ற வண்ணப்பெட்டியைத்
தள்ளிவைத்த அவளுக்கென
மழையை நிறுத்தி
வரையத் தோதான
வானவில்லைத் தருகிறது
வானம்

## 2. வெளிப்பாடு

மஞ்சளும் கரும்பும்
செழித்திருந்த நிலத்தில்
வீடுகள் முளைத்துக் கிடந்தாலும்
பச்சைய ஆசையை
மனித மனதில் வேர்பிடிக்க வைத்துத்
தொட்டியிலாவது தன்னை
வெளிப்படுத்திக் கொள்கிறது
விளைச்சல் பூமி

## 3. ஏனெனில்...

நீண்ட குழலின் மேல்
சட்டென்று விரியும்
ஒரு குட்டி அதிசயம்தான்
என் மனப் பூக்களும்

நீங்கள் ஊமத்தம் என்று
பெயரிடும்போதுதான்
என் மலர்கள் உங்களுக்கு
முள் காய்களைப் பரிசளிக்கின்றன

## 4. நினைவு

நகர்த்தி வைக்கையில்
பழைய நினைவுகள்
சட்டென விழித்துக்கொள்ள
மறைந்த
தாத்தாவுடன் காற்றில்
கதை பேசி ஓய்கிறது
சாய்வு நாற்காலி

## 5. ஆதவன்

மூடிய கதவுகள்
எப்போது திறக்கப்படுமோவெனக்
கைகூப்பிக் காத்திருக்கும்
கூட்டத்திற்கு
எந்நேரமும் சுள்ளென்று
தரிசனம் தந்தபடியே
இருக்கிறார்
எப்போதாவது மட்டுமே
கண்டு கொள்ளப்படும்
வெயில் கடவுள்

## 6. வெளிப்படுதல்

மாபெரும் இறக்கைகளை
விரித்து மூடிக்கொள்கிறது
மேகப் பருந்து
அடை காக்கும் காலம் முடிந்ததும்
வெளிப்படுகிறது
பச்சைச் சிறகுகள் முளைத்த
மலையொன்று

கி. சரஸ்வதி <ameech2004@gmail.com>

# அன்றும். இன்றும். என்றும்...
# உங்களுடன் ஸ்ரீராம்...





1975 இல் திரு. தியாகராஜன் தனது ஒரே மகளின் கல்யாண செலவு திட்டத்திற்கு மேல் அதிகரித்தது. பாக்கித் தொகைக்கு எங்கே செல்வது? மனைவியின் நகையை அடமானமோ, நிதியுதவியோ, வீட்டின் மீது கடனோ இதற்கெல்லாம் வழியில்லை. அவர் எப்படி சமாளித்தார்? ஏற்கனவே சேர்ந்திருந்த ஸ்ரீராம் சீட்டை ஏலத்தில் எடுத்து வெளி ஆதரவையோ, உதவியையோ நாட வேண்டிய அவசியமின்றித் தனது தேவைக்கான நிதியைப் பெற்றார்.

இன்று திருமதி. லதா முசிறியில் காய்கறி வியாபாரம் செய்து வருகிறார். ஸ்ரீராம் நிறுவனத்தில் ரூ.1 இலட்சம் நிதியுதவி பெற்று வியாபாரத்தில் முதலீடு செய்து நல்ல வருமானம் பெற்று ஸ்ரீராம் குடும்பத்தில் அங்கத்தினராக இருக்கிறார்.

1974 ஆம் ஆண்டு துவங்கப்பட்டு ஸ்ரீராம் சீட்டு நிறுவனம் ரூ.250 முதல் சிறிய தொகையில் சீட்டுக்களை தொடங்கி ஏழை எளிய மக்கள் தங்களின் வீடு, கல்வி, திருமணம் மற்றும் மருத்துவச் செலவு என பலவித தேவைகளைப் பூர்த்தி செய்ய கடந்த 40 வருடங்களாக, 4 தலைமுறைகளாக பெரும் பங்களித்துள்ளது. இன்று 50,000 ரூபாய் முதல் 50 இலட்சம் வரையிலான சீட்டுத் திட்டங்கள் மூலம் 700 கிளைகள், 12000 பணியாளர்கள், 80,000 முகவர்கள், ரூ.60000 கோடிக்கு மேல் பணம் வழங்கப்பட்டு, 40 இலட்சம் வளமான வாடிக்கையாளர்கள் என வளர்ச்சியடைந்துள்ளது.

இன்று இந்தியாவில் 80% லாரிகள் தனி நபர் வசமே உள்ளது. ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் இந்தியாவில் இயங்கும் லாரிகளில் 25% அளவிற்கு நிதியுதவி அளித்து ஓட்டுநர்களாக இருந்தவர்களை லாரி உரிமையாளராக உருவாக்கியுள்ளது. இதன் மூலம் 15 இலட்சம் பேர் பயனடைந்துள்ளனர். ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் கடந்த 40 வருடங்களாக லாரி உரிமையாளர்களுக்கு கடன் வழங்கி வருகிறது. இன்று லாரிக் கடன் வணிகம் (AUM) ரூ.55000 கோடி உள்ளது.

கடந்த 30 ஆண்டுகளாக ஸ்ரீராம் சிட்டி யூனியன் பைனான்ஸ் லிமிடெட் – குறு, சிறு மற்றும் நடுத்தர என தொழில் முனை வோருக்கு சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.2 இலட்சம் வரை நிதி வழங்கிள்ளது. இந்த சேவை 995 கிளைகள், 15,506 பணியாளர்கள் மூலமாக 23 இலட்சம் வாடிக்கையாளர்களுக்கு நிதியுதவி வழங்கப்பட்டு 14,937 கோடி ரூபாய் வணிகம் (AUM) உள்ளது.

ஸ்ரீராம் ஹவுசிங் பைனான்ஸ் லிமிடெட் நிறுவனம் தொடங்கப்பட்டு வீடு வாங்க கடன் சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.10.23 இலட்சம் என வழங்கப்பட்டுள்ளது. இந்த சேவை 47 கிளைகள், 259 பணியாளர்கள் மூலமாக செயல்பட்டு வருகிறது. இதுவரை 3000 வாடிக்கையாளர்களுக்கு ரூ.322.64 கோடி நிதியுதவி வழங்கப்பட்டுள்ளது.

தென் ஆப்பிரிக்காவின் மிகப் பெரிய காப்பீட்டு நிறுவனமான **SANLAM** னுடன் இணைந்து இந்தியாவில் ஸ்ரீராம் லைஃப் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 10,34,630 காப்பீடுகள் பெறப்பட்டு இழப்பீட்டு தொகை ரூ.87.26 கோடிகளும் மற்றும் **SANLAM**-ன் கிளைப் பிரிவாகிய **SANTAM** னுடன் இணைந்து ஸ்ரீராம் ஜெனரல் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 14,07,677 காப்பீடுகள் பெறப்பட்டு இது வரை இழப்பீட்டு தொகை ரூ.452.62 கோடிகள் வழங்கப்பட்டுள்ளது.

தொழில் முனைவோர்களை அதிகம் கொண்ட நாடு இந்தியா. அத்தகைய தொழில் முனைவோரை ஊக்குவித்து, நிதியளித்து, வருவாய் பெருகவும், வாழ்க்கைத் தரம் மேம்படவும் உதவுகிறோம். கடந்த 40 வருடங்களாக விஜயதசமி மற்றும் சித்திரை என இருமுறை நடைபெறும் சீட்டுத் திருவிழாவில் பங்கு கொண்டு உங்கள் தேவைகளுக்கு ஏற்ப திட்டங்களை தேர்ந்தெடுத்து பயனடைந்துள்ளீர்கள். இந்த இணக்கமான உறவு அன்றும், இன்றும், என்றும் தொடர்ந்து கொண்டே இருக்கும். மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**ஸ்ரீராம் சிட்ஸ்**

மக்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 6 • போன்: 4223 6000 www.shriramchits.com

WORDCRAFT



16 cm x 23 cm colour

# டி. கண்ணன் கவிதைகள்



1

மாடுகளின் கழுத்து மணியோசைக் கேட்கிறது
மேய்ச்சல் முடிந்து திரும்புகிறதா?
மேய்ச்சலுக்கு புறப்படுகிறதா?
தெளிவில்லை அவனுக்கு
அவன் காலமற்ற வெளியில்
நீரூற்று ஒன்றின் மேல் படுத்துக்கொண்டு
கனவு கண்டு கொண்டிருக்கிறான்
புலரியும்'
அந்தியும்
திறவுகோல்கள்
மட்டுமே...
திறப்பவன் யார்?
என்பதற்கான விடையை
தேடி அலைந்துக் கொண்டிருந்தது
கனவு

2

அவன் கஞ்சன் என்பதை ஊரறியும்
அஞ்சாத கஞ்சன் என்ற நாமகரணமும்
அவனுக்கு உண்டு
மூல நோய் வாய்த்தவன் போல்
சதா பிறரிடல் எரிச்சல்
அவன் கடுமையாக பொருள்
சேர்த்துக் கொண்டிருக்கிறான்
இவனும்
விமரிசையாக சம்பாதித்துக்
கொண்டிருக்கிறான் தான்
இவனுக்கு சகன் மீது எரிச்சல் இல்லை
ஆனால், பொறாமை உண்டு
ஊரில் ஓடும் இரு நதிகளில்
ஒன்றில் இவனும்
மற்றொன்றில் அவனும்
பவுர்ணமி இரவுகளில்
நீரலைகிறார்கள்
இருவரும் ஒருவரல்ல
என
நான்
கூறினால்
நீங்கள் நம்ப மறுக்கிறீர்கள்

3

'கர்மா' கழிந்துக் கொண்டிருக்கிறது
என்றார் அப்பா
நோய் முற்றிக் கொண்டிருந்தது
அச்சிறு குழந்தைக்கு

4

அந்த ரயில் பிரயாணத்தில்
ஜன்னலூடே
இறந்து போய் விட்ட தம்பி
மிதந்து வந்து கொண்டேயிருந்தான்
ஜன்னல் 'சீட்' கேட்டு
அடம் பிடித்துக் கொண்டிருந்தது
பக்கத்து இருக்கை
குழந்தை

"டி. கண்ணன்" <krishnaswamy164@gmail.com>

# ரோஜாவாய் இளம் பாதங்கள்

கன்னடத்தில் **வைதேகி**
தமிழில்: **தி.இரா. மீனா**

அந்தச் சாலை அவளுக்குப் புதியதில்லை; வீடுகளும்தான். ஆனால், வீட்டிற்குள் இருக்கும் மனிதர்கள்? அவளுக்கு உறுதியாகத் தெரியவில்லை.

ஒருநாள் வழக்கம் போலவே அவள் அந்தச் சாலையில் நடந்து கொண்டிருந்த போது, ஒரு ரிக்ஸா அவளைக் கடந்து ஒரு வீட்டின் முன்னால் போய் நின்றது. கைக்குழந்தையை மார்போடு அணைத்தபடி ஒரு முதிய பெண்மணி இறங்கினாள். அவளுக்குப் பின்னால் இன்னொரு பெண் ஷ அந்தச் சிசுவின் தாயாக இருக்க வேண்டும். வேகமான நடையை நிதானப்படுத்திக் கொண்ட சரிதா, தன் பார்வை அந்த இடத்தில் தங்குவதை உணர்ந்தாள். அந்தக் குழந்தையின் ரோஜா நிறப் பாதம் அதைச் சுற்றி இருந்த துணியிலிருந்து எட்டிப் பார்த்தது. என்ன அற்புதம்! உடனே அவர்கள் வீட்டிற்குள் மறைந்துவிட்டனர்.

அந்த நாள் முதல், அந்த வீட்டைக் கடக்கும் போது, அவள் பார்வை இங்குமங்கும் அலைந்து தேடும். அங்கு அந்த முற்றத்தில், ஆடை வரிசைகளை அவளால் பார்க்க முடியும். மிகச் சிறிய ஆடைகள், நாப்கின்கள், உறைகள், படுக்கை விரிப்புகள் என்று அந்த வரிசைகள் குழந்தையின் இருப்பை மிக விரிவாகச் சொல்லும். ஆனால், அந்தக் குழந்தையை எங்கும் பார்க்க முடியவில்லை.

முற்றத்தில் எவ்வளவு அழகாக அந்த ஆடைகள் வரிசைகளில் தெரிகின்றன! காற்றில் மிக மென்மையாக அந்த ஆடைகள் அசைவது குழந்தைக்குத் தாலாட்டு பாடுவதாய்த் தெரியும். அவளுக்கு உள்ளே போகவேண்டும் போலிருந்தது. ஆனால், எப்படி? ஒருவிதமான நடுக்கம் அவளைக் கட்டுப்படுத்தியது. குழந்தையைப் பார்க்க வேண்டுமென்னும் ஆசையை அவளால் எப்படி விளக்க முடியும்? 'ஏய், நீ இதற்கு முன்னால் குழந்தைகளைப் பார்த்ததேயில்லையா?' என்று அவர்கள் சொல்லி விட்டால்... மூட நம்பிக்கை உள்ளவர்களாக அவர்களிருந்தால்? யாரோ வழிப்போக்கர் குழந்தையின் மீது திருஷ்டி போட்டார்கள் என்று பழி சொல்லி விடுவார்களோ?

சில சமயங்களில் குழந்தை அழுவது அவளுக்குக் கேட்கும். சில நிமிடங்கள் அங்கு நின்று அதை கவனிப்பாள். எந்த அழுகையும் அவள் மனதிற்கு ஓர் இயல்பான வருத்தத்தை தரும் என்பது அவளுக்குத் தெரியும். ஒரு கத்தி நேரடியாக அவளுடைய தைரியத்தை குத்திக் குதறுவதான வலியில் அவள் நடுங்குவாள். அவள் கண்கள் அந்த ரோஜா நிற இளம் பாதத்தைத் தேடும்.



அங்கேயே நிற்பதை அவளால் சில நிமிடங்கள் தொடர முடியுமா? அங்கே அவளை பார்ப்பவர்கள் 'என்ன', 'ஏன்', 'எதற்கு', 'யார்' என்று குடைவார்களே! ஒன்று அவள் உள்ளே போக வேண்டும் அல்லது வழக்கம் போலத் தன் வழியைப் பார்த்துக்கொண்டு முன்னே நடக்க வேண்டும்.

மேலே நடப்பதைத் தவிர அவளுக்கு வேறு வழியில்லை. உனக்கான நேரம் என்று நிறையப் பொழுதை இந்த உலகம் தரவில்லை. சில களவாடப்பட்ட கணங்கள் இங்குமங்குமாக. சுற்றியுள்ள சமுதாயம், உறவுகள் ஆகியவைகளுக்குத்தான் மீதமுள்ள பொழுதுகள். அப்படித்தான் இல்லையா? யோசித்தபடியே அவள் சாலையைக் கடந்து எதிர்ப் பக்கத்தை அடைந்தாள்.

இன்னொரு நாள், குழந்தையின் கொலுசு சப்தத்தைக் கேட்டாள். தன் பாதங்கள் மண்ணில் அறையப்பட்டிருப்பது போன்ற உணர்வில் பூமியோடு ஒன்றி நின்றாள். வெள்ளிக் கொலுசு மணியோசையோடு இளம் பாதங்கள் மனதுக்குள் நிறைந்தன. இல்லை, அவளால் பாதத்தை பார்க்க முடியவில்லை. ஆனால், அந்த இனிய ரீங்காரம் நினைவிலிருந்து மங்கவேயில்லை. கழுத்து நரம்புகள் இறுகிப் புடைத்து நின்றன. அந்த ரீங்கார ஓசையை அடக்கிக்கொள்ள அவள் முயன்ற போது, புடைப்பு இன்னும் அதிகமானது.

"யாரது?" ஜன்னலிலிருந்து பயத்தோடு ஒரு குரல் வெளிப்பட்டது, வெளியே இருப்பவர் ஒரு பிள்ளை பிடிப்பவர் என்பது போல. அப்போதுதான் ஒரு குலுக்கலோடு அவள் தன் நினைவுகளிருந்து மீண்டாள். கன்னங்களில் இளம் சூடான கண்ணீர் வழிந்தது. அங்கே நின்றிருந்த அந்தப் பெண்மணி அவளை ஆச்சர்யத்தோடு பார்க்க, சரிதா தன் கண்ணீரைத் துடைத்தபடி நகர்ந்தாள். அந்த மணியோசை காதுகளில் தொடர்ந்து ரீங்கரித்து ஞாபகங்களைக் கிளறியது.

மல்லாந்திருந்த குழந்தை குப்புறத் திரும்பி இருக்க வேண்டும். அம்மாவின் மகிழ்ச்சியான சிரிப்பு கேட்டது. சரிதா நகரத் தொடங்கிய தருணத்தில் அந்த மகிழ்ச்சியான விஷயத்தைச் சொல்ல குழந்தையின் தாய் கூப்பிட்டது தற்செயலான ஒன்றுதான். "ஓ... என்ன அவள் குப்பரித்தாளா? அப்படியானால் நாம் 'தோசை' செய்ய வேண்டும்!" அந்த முதிய பெண்மணி சொன்னாள்.

“அப்பா இங்கேயிருக்கிறார் என்று என் கள்ளிக்கு எப்படித்தெரிந்ததாம்?” குழந்தையை வார்த்தைகளால் அணைத்துக்கொள்வது போல ஓர் ஆண் குரல் மகிழ்ச்சியில் கொப்பளித்தது. அவனுடைய அந்த சீட்டி ஒலியில் குயில் கூவியது.

சரிதாவால் தன் கால்களை பூமியிலிருந்து எடுக்க முடியவில்லை, ஓர் அடி கூட நகர முடியவில்லை.

அடிவானம் இளஞ்சூடும் மென்மையும் கலந்த வெளிச்சப் புன்னகையை அவள் முகத்தருகே நீட்டியிருந்தது. நடுங்கும் உதடுகளோடு, மிக ஆழமான உள்வாங்குதலில் தன் கண்களை மூடிக்கொண்டாள். அவனுடைய அந்த மயக்கும் புன்னகையும் அடர்த்தியான முடி படர்ந்த நெஞ்சமும் அவள் தன்னையே மறந்து போக வைத்தவை. அவற்றிலிருந்து அவள் மீள்கிற போது தன்னைச் சுற்றி அவளால் என்ன பார்க்க முடியும்? வெறுமையின் விரிவு அது! ஆழமான கடலுக்குள் அவளைத் தள்ளிவிடக் கூடிய ஒரு வெறுமை. அவள் மனதின் ஆழத்தில் மறைத்து வைத்திருக்கிற இனிய உணர்வின் மென்மை தடயங்களைத் துடைத்து விடுகிற வெறுமை. அந்தக் கூவும் குயில் எங்கே பறந்து போனது? அந்த பொழுது முதலாக காற்றில், வசந்தத்தில், விரிந்த வெறுமையில், குரலில், பாடலில் தேடிக் கொண்டு இருக்கிறாள்.

மென் படல விழிகள் சாலையைத் தெளிவற்ற கோடாய்க்காட்டியது. மெலிதாகப் படர்ந்திருந்த நீர்த் திரையைத் துடைத்துக்கொண்டு, கால் விரல்களை அழுத்திப் பதித்துக் கொண்டு, காம்பவுண்டின் குறுக்கே தெரிந்த ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். அப்படி செய்யக் கூடாதென்று அவளுக்கு நன்றாகத் தெரியுமெனினும், ஒருவரின் தீவிரமான ஆசை சமூக விதிகளுக்கு அப்பால், உணர்ச்சிகளின் பின்னணி யிலான திருப்தியை பூர்த்தி செய்தே தீரும் என்பதும் அவளுக்குத் தெரியும்,

அப்பா அல்லது குழந்தை யாரையும் பார்க்க முடியவில்லை. எதிர் வீட்டிலிருந்து எட்டிப் பார்த்த பெண்மணி, “யாரது? உங்களுக்கு என்ன வேண்டும்? தயக்கமின்றி உள்ளே செல்லுங்களேன்” என்றாள்.

சரிதா வெறுமே தலையாட்டி விட்டுக் கிளம்பிவிட்டாள்.

அவளுக்கு யாரைப் பார்க்க வேண்டும்? பலமற்று சிணுங்கியவளாக நடந்தாள். சக்தி முழுவதையும் இழந்தவளாக உணர்ந்த போதும், சிறிது ஓய்வெடுக்க கூட விரும்பாதவளாக, எங்கும் தடைப்பட்டு நிற்க விரும்பாதவளாக மேலே நடந்தாள்.

சில மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள், அந்த வீடு விருந்தினர்களால் நிரம்பி வழிந்தது. பெரியவர்களின் பலத்த குரல்களுக்கிடையே குழந்தையின் குரல் மிக மிக மெலிதாகக் கேட்டது. வீட்டிற்கு வெளியே சில கார்களும் நின்றிருந்தன. அது ஆண் குழந்தையா அல்லது பெண் குழந்தையா? சரிதாவின் கண்கள் உலர்த்தப்பட்டிருந்த வரிசை ஆடைகளை மேய்ந்தன. இடுப்பு சுற்றுத் துணிகள் எந்தத் துப்பையும் தரவில்லை. குழந்தையின் புதிய பெயர் என்னவாக இருக்கும்? ஒரு பெயர் தலையில் உருக்கொண்டு, நின்று, பின் மெதுவாக மறைந்தது. மிக மிக மெதுவாக அவள் முன்னே நடந்தாள்.

அன்றிரவு கனவில் மீண்டும் அந்தக் குழந்தை வந்தது. சில மாதங்கள் கருப்பையிலிருந்த குழந்தைக்கு முகமும் உடலும் இன்னமும் சரியாக உருவாகவில்லை. ஆனால், அது அவளைச் சுற்றி வட்டமடித்து, தொற்றிக் கொண்டும், கொக்கரித்துக் கொண்டுமிருந்தது. அவள் கையை நீட்டினாள். அது தவழ்ந்து தன் தொப்பையை நகர்த்திய போது பாதங்களிலுள்ள மணிகள் ஒலித்தன. அதை மட்டுமே அவள் தொடர்ந்தாள். அது மறைந்து போனது! மீண்டும் வரவேயில்லை. ஒரு போதும் வரவேயில்லை.

உண்மையாக வரவேயில்லையா?

மனிதர்களை மயக்குவதற்காக மாயை உண்மையைப் போல வேஷம் போடுகிறது. அது முடிந்து விட்ட பிறகு, மிகப் பெரிய அலட்சியத்தோடு, காயங்களை, இடைவெளியை ஏற்படுத்தி விட்டு விலகி விடுகிறது!

அவள் ஆபீசுக்குப் புறப்படத் தயாரானாள். மேக மூட்டமான, மழை இல்லாத ஒரு விதமான பருவநிலை அன்று. அந்த வீட்டின் முன்னால் நின்றிருந்த காரில் சிலர் ஏறுவதைப் பார்த்து அவள் பதட்டமானாள். மிக வேகமாக நடந்தாள். யாரோ ஒருவரின் கையில் குழந்தையிருந்தது. அவள் அருகே வந்த நேரத்தில் கார் புறப்பட்டிருந்தது. அந்த முற்றம் வெறுமையாகவும் களையற்றுமிருந்தது. அங்கிருந்த ஆடை வரிசையில் எந்த உயிரோட்டமுமில்லை. வீடே உயிரற்று இருந்தது. கேட்டின் அருகே நின்றிருந்த அந்த முதியவளின் முகம் துயரத்தில் மூழ்கியிருந்தது. எதிர்வீட்டிலுள்ள பெண்மணி ஜன்னலின் வழியாக எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். “நீங்கள் மனச்சோர்வு அடைந்திருக்க வேண்டும். இல்லையா?” காயத்தில் குதறுவதுதான் இது.

பிறகு சரிதாவின் முகத்தைப் பார்த்து விட்டு, “குழந்தை போய் விட்டது! நீங்கள் தினமும் வெளியே நின்று பார்த்துக் கொண்டிருப்பீர்கள். உங்களுக்கு அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை இருந்ததென்று நான் நினைக்கிறேன். நீங்கள் நேரே உள்ளே போய்க் குழந்தையைப் பார்த்திருக்கலாம். அது உங்களால் முடிந்திருக்காதா? ஆமாம், உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள்? உங்கள் கழுத்தில் நான்

கருகமணியைப் பார்க்கவில்லை. நாகரிகமா? அல்லது இன்னும் திருமணம் ஆகவில்லையா?” அந்தக் குரல் அநாவசியமான ஆர்வத்தின் உருவமாக ஜன்னலை துளைத்துக் கொண்டு வந்தது. சரிதா வெறுமையோடு முதியவளைப் பார்த்த போது, “நான் மிக மனமுடைந்து போயிருக்கிறேன். நீ உள்ளே வரமாட்டாயா? நாம் உட்கார்ந்து பேசலாம்” என்று அவள் சொன்னாள்.

அவளுடைய குரலில் பரிச்சயமான இரக்கம் வெளிப்பட்டது. ”சரி. நான் ஒரு நிமிடத்தில் வந்து விடுகிறேன்!” மகிழ்ச்சியில் துள்ளிக் குதிப்பது போல ஜன்னலிலிருந்து குரல் வந்தது.

பல நூற்றாண்டுகளாக அசையாமல் நிற்கிற கற்பாறைகளுக்குக் கூட தமக்குள்ளே சுமையை குறைத்துக் கொள்வதற்கான ஒரு வித வேகம் பீறிடலாம். ஊற்றெடுக்கலாம். ஆனால், அடுத்து என்ன? பொறுக்க முடியாத இருத்தலா? அந்த நினைவிலேயே அவள் நடுங்கிப் போனாள். மனதிலிருந்து மிக கவனமாக அந்த வார்த்தைகள் வந்து விழுந்தன. “இல்லை. நான் ஆபீசுக்குப் போக வேண்டும். ஏற்கெனவே தாமதமாகி விட்டது” ஒரு கணம் கூட அவளுக்கு அங்கே நிற்க தைரியமில்லை.

“வாழ்க்கையில் தவறு செய்து அவள் எல்லாவற்றையும் இழந்திருக்க வேண்டும். அவள் கண்களில் கண்ணீர் வழிந்ததே?” ஜன்னல் குரல் முணுமுணுத்தது. அந்த வார்த்தைகளின் நோக்கம் சரிதாவைக் காயப்படுத்துவதுதான். ஆனால், அவள் ஓடவில்லை. அந்த வீடு தனது உயிரோட்டமான மகிழ்வைத் தொலைத்துவிட்டு, அமைதியாக ஆனால், விருப்பு வெறுப்பற்றதாக அவள் முன்னால் நின்றது.

இரு பக்கங்களிலும் மரங்களின்றி அந்தச் சாலை முடிவற்ற நாக்காக நீண்டிருந்தது. நாளின் பகல் பொழுதில், நீலவானத்தில் உயிரற்றதாக தம்மை மறைத்துக்கொண்டு, ஆனால், இரவில் ஒளிர்கிற நட்சத்திரங்களோடு அடிவானம் ஜொலித்தது. அந்த முடிவற்ற சாலையில், புதிரான வானப் பரப்பின் கீழ் சரிதா நடந்தாள், இன்னுமொரு புதிராய்.

---

*நன்றி:* An Afternoon With Shakunthala and Other Stories *(சகுந்தலாவுடன் ஒரு மதியப் பொழுதும் மற்ற சிறுகதைகளும்)* Katha Bharathi Series, The Library Of Indian Literary Classic Sahithya Akademi, *ஆங்கிலத்தில்: சுகன்யா கனரல்லி*

*வைதேகி (ஜானகி ஸ்ரீநிவாசமூர்த்தி), நவீன கன்னட இலக்கிய பெண் படைப்பாளி. ஏழு சிறுகதைத் தொகுப்புகள், மூன்று கவிதைத் தொகுப்புகள், ஒரு நாவல், ஐந்து வாழ்க்கை வரலாற்று நூல்கள், மூன்று கட்டுரைத் தொகுப்புகள், பதினைந்து சிறுவர் நாடகங்கள், ஐந்து மொழி பெயர்ப்பு நூல்கள் என்று பல பங்களிப்புகள் உடையவர். அனுபமா விருது, மாஸ்தி விருது, எம்.கே. இந்திரா விருது, நிரஞ்சனா விருது, தனசிந்தாமணி விருது, கதாவிருது என்று பல விருதுகள் பெற்றவர். ‘கிரௌஞ்ச பட்சிகள்’ என்ற சிறுகதைத் தொகுப்பிற்காக சாகித்ய அகாதெமி விருது பெற்றவர்.*

தி.இரா. மீனா <Meena <meenmix@yahoo.com>



## புகைப்படக் கலைஞர் கே. ஜெயராம் நினைவேந்தல் நிகழ்ச்சி

ஆகஸ்ட் 6ஆம் தேதி ஞாயிறன்று மாலை 4 மணியிலிருந்து கோவை பெர்க்ஸ் பள்ளி அரங்கில் நடைபெறுகிறது. ஜெயராமின் **Moody Landscapes** புகைப்படக் கண்காட்சியும் இந்நிகழ்வில் இடம்பெறும்.

மாலை 4.15 –5.15: மயனின் **Insects to Infinity** ஜெயராம் பற்றிய ஆவணப்படம் திரையிடல்

மாலை 5.30 – 8.00: நினைவு பகிர்தல்

இடம்: பெர்க்ஸ் அரங்கம், பெர்க்ஸ் மெட்ரிகுலேஷன் மேல்நிலைப் பள்ளி, 57 திருச்சி சாலை, உப்பிலிபாளையம், கோயம்புத்தூர் (போட் ஹவுஸ் அருகில்). தொலைபேசி: 98942 00340, 97904 57568

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

**ஓவியம்: நடேஷ்**



## 18. கானல் வரி

பொங்கிப் பிரவகிக்கும்
புனலழகை மெல்லப் பார்வையால் அளந்து
விரல்களால் அளைந்து
பின்
தயக்கம் துறந்து
தன்னிச்சையாகச்
சுழித்தாடிக் களிக்கத் தொடங்குகையில்
நொடிதோறும்
புதுப்புது ஊற்றுகள் காட்டி
உனைத் திசைகள் மாற்றி அலைக்கழிக்கும்
தேன்சுனை
எனதிந்தத் தேகம்.

ஆனந்த மிகுதியில்
நீ நர்த்தனமாடுகையில்
சரேலென உள்ளிழுக்கும்
என் வேகத்துக்கெதிராய்
மூச்சடக்கி மூழ்கி
மீண்டெழ முயலும் உன்
எதிர்நீச்சல் வித்தைகள் தோற்க
வேண்டுமென்றே சரணடைவாய்
நதிப் போக்கில்
மிதந்துபோய்
மெதுவாய்க் கரைசேர்வாய்

பிறகு
ஆசுவாசம் தருமதன்
கரைகளில்
தலை சாய்ந்து உறங்கியிருப்பாய்!
மனதில் இறைந்துகிடக்கும்
சொற்களைக் கூட்டி
மறுபடியும்
நானொரு வரியை எழுதத்தொடங்குகையில்.



## 19. நெடுஞ் சுரம்

ஆயுள் கைதிக் கணவனுக்காகச்
சிறைச்சாலையின் வாயில் அருகே
சாப்பாட்டுக் கூடையுடன் காத்திருக்கிறவள்
கண்களில் தளும்பிக் கொண்டிருக்கிறது
உறைந்துபோன பழைய வாழ்க்கை,
தர மறந்த முத்தங்கள்,
பிணங்கிப் புறக்கணித்த இரவுகள்,
இனி வரவே வாய்ப்பற்ற வசந்தம்.

சரிந்து அமர்ந்திருப்பவளின் கலைந்துகிடக்கிற
மாராப்புப் பூக்களை
வெட்கமின்றி வெறிக்கும்
கள்ளப் பருந்துக் கண்களை,
துயர் துடைப்பதான பாவனையில்
தூண்டிலிட்டுக் காத்திருக்கும் உறவுக்கார
ஆண்களின் கீழ்மைகளை,
கதவைக் கடக்கையில்
காவலாளிகள் காட்டும் சமிக்ஞைகளை
எனப் பலவற்றையும்
அலட்சியமாகப் புறந்தள்ள
அவளிப்போது பழகிவிட்டிருக்கிறாள்.

கவளங் கவளமாய் உணவை
உருட்டிக் கணவனின் கைகளில் வைப்பவள்
சபிக்கப்பட்ட தன் இளமை
சிறைவளாகத்தின் முள்வேலியில் சிக்கிய
பாலீத்தீன் காகிதமெனப்
படபடப்பதைப் பார்த்தபடி
எச்சில் எவர்சில்வர் தட்டைப்
பளபளவெனக் கழுவி
மீண்டும் கூடையில் சுமந்துகொண்டு
விடைபெறுகிறாள்
வாவென்றழைக்கும்
தாராளமான மரங்களின் நிழல்களைப் புறக்கணித்து
வெக்கையான நெடுஞ்சாலையில்
தனியாக.

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

## கே.ஜெயராம்
## 1948 - 2023

# ஒரு உன்னதக் கலைஞனின் பயணம்

**ஆனந்த்**
**(கோணங்கள்)**

புகைப்படக்கலை ஒளியை அடிப்படையாகக் கொண்டது. ஒளியின் உன்னதங்களையும் அதன் ரகசியங்களையும் ஆழமாக அறிந்த அரிய புகைப்படக் கலைஞர்களில் ஜெயராம் ஒருவர். கருப்பு வெள்ளையாகட்டும் வண்ணங்களாகட்டும், அனைத்து நிறங்களின் ஆழமிக்க உணர்வுகளை வெளிப்படுத்தும் ஓவியராகவே வாழ்நாள் முழுவதும் செயல்பட்ட புகைப்படக் கலைஞர்.

ஜெயராமின் இறுதி நாட்களில் நிகழ்ந்த, உதகமண்டலம் நகரின் இரண்டாம் நூற்றாண்டு விழா புகைப்படக் கண்காட்சியில், அழகாகச் சட்டமிடப்பட்ட அவருடைய ஐம்பத்து நான்கு புகைப்படங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. ஏராளமான பார்வையாளர் அவற்றைக் கண்டு மகிழ்ந்தனர். மேலும் ஒரு மாதத்திற்குக் கண்காட்சி நீடிக்கப்பட்டது. காண வந்திருந்த பழங்குடி மூதாட்டியர் அவை புகைப்படங்கள் அல்ல, வண்ணங்களைக் கொண்டு வரையப்பட்ட ஓவியங்கள் என்று உறுதியாகச் சொன்னது முக்கியமானது. இயற்கையோடு இணைந்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவர்கள் இயற்கையின் வண்ணங்களை அறிந்தவர்கள்.

ஜெயராம் 1948இல் கோவையில் பிறந்தார். தந்தை பின்னாளில் பாரத ஸ்டேட் வங்கியான இம்பீரியல் வங்கியில் அதிகாரியாகப் பணியாற்றியவர். ஷில்லாங்கில் பள்ளிப் படிப்பு. தந்தை வாங்கிக் கொடுத்த ஆக்ஃபா பாக்ஸ் காமெராவுடன் அவருடைய புகைப்படக்கலை பயணம் தொடங்கியது. அந்தப் பகுதியிலிருந்த வனப்பகுதிகள் அவரைக் கவர்ந்தன. ஓவியக் கலையிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். படிப்பு முடிந்தபின் கோவையில் பாரத ஸ்டேட் வங்கியில் பணியாற்றத் தொடங்கினார்.

கானுயிர் புகைப்படக்கலை பெரிய உயிரினங்களைப் படமெடுப்பதில் முற்றிலுமாக மூழ்கியிருந்த காலகட்டத்தில் தன்னைக் கவர்ந்த சிறிய உயிரினங்கள், தாவர வகைகள், பூக்கள் போன்றவற்றைப் படமெடுப்பதில் முழுக்கவனத்தையும் செலுத்தலானார். ஆரம்பத்தில் வைத்திருந்த அசாஹி பெண்டாக்ஸ் காமெராவில் லென்ஸை திருப்பி மாட்டி தானே செய்துகொண்ட ‘மாக்ரோ’ (Macro) அமைப்பு கொண்டு அற்புதமான ‘மாக்ரோ’ புகைப்படங்களை எடுக்கத் தொடங்கினார். வீட்டில் தொடங்கி கோவையைச் சுற்றியுள்ள வனப்பகுதிகள் முடிய வாழ்ந்த பலவகை சிறிய உயிரினங்களும் செடிகளும் பூக்களும் அவர் காமெராவில் பதிவாகின. சர்வதேச புகைப்படக் கண்காட்சிகளில் பங்கேற்கத் தொடங்கினார். அவருடைய புகைப்படங்கள் தங்கம், வெள்ளி பதக்கங்களையும் பிற பரிசுகளையும் தொடர்ந்து பெற்றுக்கொண்டிருந்தன.

‘மாக்ரோ’ புகைப்படக் கலை என்பது சிற்றுயிர்களையும் அளவில் மிகச் சிறியவற்றையும் பிரத்தியேக ‘மாக்ரோ’ லென்ஸ் கொண்டு காமெராவில் பதிவாக்கும் கலை. இதில் தும்பிகள், வண்டுகள், வண்ணத்துப் பூச்சிகள், அந்துப் பூச்சிகள் போன்று பறப்பன நகர்வனவற்றை படமெடுப்பது கடினமானது. பொறுமையை அதிகம் சோதிப்பது. அதிக தூரத்திலிருந்து படமெடுக்க முடியாது. ட்ரைபாட் (Tripod) எனும் முக்காலி அமைப்பில் காமெராவை அசைவின்றி இருக்குமாறு பொருத்தி சரியாகப் படமெடுக்கும்வரை உணவு, தூக்கம், ஓய்வு அனைத்தையும் மீறி மணிக்கணக்கில் பொறுமையாக காத்திருக்க வேண்டும்.

தற்போது படமெடுக்கும் காமெராக்களில் அனைத்து இயக்கங்களும் தானியங்கி (Auto) மயமாகிவிட்டபோதும் ஜெயராம் தானியங்கி முறையைத் தவிர்ப்பவர். அரிதாக சில அவசர



நேரங்கள் தவிர எப்போதும் காமெராவின் அனைத்து இயக்கங்களையும் அவரே இயக்கி படமெடுப்பவர்.

ஆய்வுக்குத் தகுதியான விவரங்களை வெளிப்படுத்தும் நேர்த்தியுடன் அரிய சிலந்திகளின் புகைப்படங்கள் அவர் உழைப்பில் உருவாகின. சிலந்திகளுக்கான அவர் சேவையைப் பாராட்டி அவருக்கு மரியாதை செய்யும் வகையில் ஒரு (Jumping Spider) சிலந்தி இனத்திற்கு 'மைர்மாக்னே ஜெயராமனி' (Myrmarachne Jayaramani) என அவர் பெயர் வழங்கப்பட்டுள்ளது. இயற்கையின் முக்கிய நுண்ணுயிரிகளையும் வண்டுகளையும் தும்பிகளையும் அந்துப் பூச்சிகளையும் (Moths) வண்ணத்துப் பூச்சிகளையும் அரிய சிறு பூக்களையும் ஆர்க்கிடுகளையும் (Orchids) அறிவியல் பகுத்தாராய்வுக்குப் பயன்படும் வகையில் புகைப்படமெடுத்து உலகிற்கு அளித்தவர். 'மாக்ரோ' புகைப்படக் கலைஞர்களில் இந்தியாவின் தலைமகனாகக் கருதப்படுபவர்.

ஜெயராம், இங்கிலாந்தின் பாரம்பரியம் மிக்க ராயல் போட்டோகிராபிக் சொசைட்டியின் ஏ.ஆர்.பி.எஸ் (Associate of the Royal Photographic Society) தகுதி பெற்று கௌரவிக்கப்பட்ட உலகின் இளம் புகைப்பட நிபுணர். தொடர்ந்து பெருமைக்குரிய ஐரோப்பிய E.F.I.A.P (Excellence - International Federation of Photographic Art) தகுதியையும் பெற்றார். எழுபதுகளிலிருந்தே உலகின் முக்கிய புகைப்பட வல்லுநர்களின் (who's who in photography) அமெரிக்க பட்டியலில் இடம்பெற்றவர். உலகின் உயர்ந்த விருதுகள், அவை பற்றிய செய்தியை பத்திரிகைகளுக்கும் வானொலிக்கும் தொலைக்காட்சிக்கும் செய்தியாகக் கொடுக்கத் தேவையான கையொப்பமிட்ட அறிவிப்பு சான்றிதழ்களுடன் வந்து சேரும். ஆனால், எந்த விருது பற்றியும் அவர் வெளியில் சொன்னதில்லை. நெருங்கிப் பழகிய ஒரு சிலர் மட்டும் தாமாக முயன்று அறிந்துகொண்டால் உண்டு.

குறிப்பிட்ட பூவிற்கும் அதிலிருந்து உணவை எடுத்துக்கொள்ளும் குறிப்பிட்ட உயிரினங்களுக்கும் தொடர்பு உண்டு. அந்த பூக்கள் கொண்ட தாவர இனம் அழிந்தால் அதைத் தேடிவரும் குறிப்பிட்ட உயிரினங்களும் அழிந்துவிடும். அதுபோன்றே அந்த குறிப்பிட்ட சில உயிரினங்கள் அழிந்தால் மகரந்த சேர்க்கைக்கு வழியின்றி அந்த மலர் கொண்ட தாவரங்கள் அடியோடு இல்லாமற்போகும்.

குறிப்பிட்ட தாவர இனப் பூக்களை மட்டுமே தேடிவரும் மேற்கூறிய உயிரினங்களைப் பற்றித் தெளிவாகச் சொல்வார், ஜெயராம். வண்ணத்துப் பூச்சிகளும் அந்துப் பூச்சிகளும் (Moths) இல்லாமற்போனால் உலகம் என்ன ஆகும் என்பதை உடனிருப்பவர்களுக்குச் சொல்லும்போது எப்போதும் மெலிதாகப் பேசும் ஜெயராமின் குரல் உயரும்;



கண்கள் உணர்ச்சி மிக்கதாக ஆகிவிடும்.

அடுத்து ஜெயராமின் காமெரா வண்ணத்துப் பூச்சிகளையும் அந்துப் பூச்சிகளையும் நோக்கித் திரும்பியது. வண்ணத்துப் பூசிகளைப் பற்றி புகைப்படங்களுடன் கூடிய 'Some South Indian Butterflies' நூலுக்கு அவர் இணையாசிரியர். வண்ணத்துப்பூச்சி இனங்களை வகைபிரித்து வகுத்து அப்புத்தகம் உருவாக உதவிய Taxonomist பணியையும் மேற்கொண்டார். Taxonomy என்பது உயிரினங்களை வகைப்படுத்துதல். தாவரங்கள், பிற உயிரிகள் (Flora & Fauna) அனைத்திற்கும் அவற்றின் இனங்களை அறிவியல் வகையில் வரையறை செய்வதற்கான முறையை ஜெயராம் தானாகவே கற்றறிந்து புலமை பெற்றவர். இது பற்றிய நூல்கள் பல இவரிடம் உண்டு. இதற்காக இறுதிவரை அவரைத் தேடி வந்த அறிவியலாளர்களில் ஆய்வு மாணவர்கள் பேராசிரியர்கள், Zoological Survey of India & Botanical Survey of India ஆய்வாளர்கள் அடக்கம்.

தவளைகள் மீது முதலிலிருந்தே அவருக்கு கவனம் உண்டு.தவளைகளை ஆய்வுசெய்யும்நண்பருடன் இணைந்து மேற்குத் தொடர்ச்சி மலை முழுவதும் அதற்கான பல பயணங்களை மேற்கொண்டார். தவளைகள் காடுகளில் இருள் சூழ்ந்த முன்னிரவில் நீர்நிலைகள் சதுப்பு நிலப்பகுதிகளில் இரைதேடி வெளிவரும் நேரங்களில் இவர்கள் அங்கிருப்பார்கள்.





தலைகளில் கட்டியுள்ள இதற்கான பாட்டரி ஒளிவிளக்குகள் கொண்டும் தவளைகள் எழுப்பும் ஒலிகொண்டும் அவர்கள் தேடிச்செல்லும் இனத் தவளையைக் கண்டுபிடித்தபின் படமெடுத்து மற்ற விவரங்களையும் பதிவு செய்ய வேண்டும். இவர்கள் பதிவு செய்யும் சில தவளைகள் அதுவரை பதிவு செய்யப்படாத புதிய இனங்களைச்சேர்ந்தவையாகவும் இருக்கலாம்.

இரவில் தவளைகள் இருக்கும் இடங்களில் இரைதேடி பாம்புகள் வருவது வழக்கம். இவர்கள் சென்ற சில இடங்கள் ராஜ நாகங்கள் வாழ்ந்த பகுதிகள். யானைகளும் பிற மிருகங்களும் உலவும் அடர்ந்த காடுகளில் அமைதியாகவும் நிதானமாகவும் தாங்கள் தேடிக்கொண்டிருக்கும் தவளை ஒன்றே குறியாக அந்த இடத்தை அலசித் தேடி குறிப்பிட்ட தேவையான இனத்தைச் சேர்ந்த தவளைகளைக் கண்டறிவது வழக்கம். அட்டைகள் கடித்து ரத்தக்களரியாக்கிவிடும். அனைத்தையும் மீறி இந்த ஆய்வுகள் உற்சாகத்துடன் தொடர்ந்தன. உலக இயற்கை இதழ்கள் பலவற்றில் ஜெயராமின் தவளை புகைப்படங்கள் வெளியாகின. தவளைகளின் ஆய்வுக்கான அவரின் நிகரில்லா பங்களிப்புக்கு அவரை கௌரவிக்கும் வகையில் ஒரு தவளை இனத்திற்கு Raorchestes Jayarami (Jayaram's Bush Frog) எனப் பெயரிடப்பட்டுள்ளது



தான் எடுத்திருக்கும் புகைப்படங்களின் ஸ்லைடுகளை (Slides) பகுப்புவாரியாகவும் காலவாரியாகவும் நேர்த்தியாகப் பிரித்து அடுக்கி பத்திரப்படுத்தி வைத்திருப்பார். லட்சக்கணக்கான ஸ்லைடுகள். எதைக் கேட்டாலும் உடனே அதை அவரால் அந்த தொகுப்பிலிருந்து எடுத்துக்கொடுக்க முடியும். அவருடைய புகைப்படங்கள் Transparency /Slide வகையைச் சேர்ந்தவை. ஆரம்ப நாட்களில் இதற்கான ஸ்டுடியோ இந்தியாவில் இருக்கவில்லை. அதனால் ஃபிலிம் சுருள்களை அமெரிக்க கொடாக் நிறுவனத்திற்கு தபாலில் அனுப்பி டெவலப் செய்து திருப்பி வாங்க வேண்டியதிருந்தது. எழுபதுகளில் கோவை லயன், ரோட்டரி சங்கங்கள் உதவியுடன் இயற்கை புகைப்படக் காட்சிகள் ஜெயராமின் ஸ்லைட்களைக் கொண்டு அதிர்வற்ற எலெக்ட்ரனிக் ஜாஸ் இசைப் பின்னணியுடன் அரங்கு நிறைந்த கூட்டங்களில் காண்பிக்கப்பட்டன.

பின்னாட்களில் கோவை ராம்நகரிலிருக்கும் சாவித்திரி போட்டோ ஸ்டுடியோவில் அவர்கள் பிரிண்ட் போடும் பிரிண்ட்டர்களில் ஒன்றையே ஜெயராம் தனியாகப் பயன்படுத்தி அவரே பிரிண்ட்டுகளைப் போட்டுக்கொள்ள வசதி செய்திருந்தார்கள. கைகளால் பிரிண்ட் போடும் கலையிலும் மெஷின் கொண்டு பிரிண்ட் உருவாக்கத்திலும் ஜெயராம் விற்பன்னர் அவருடைய நீண்டநாள் நண்பரும் புகைப்படக்கலை பள்ளி ஒன்றை நடத்தி வருபவருமான ஸ்ரீனிவாசன் (பெர்க்ஸ்) ஜெயராமுக்கென்று உயர்தர எப்ஸன் பிரிண்ட்டர் ஒன்றை வாங்கினார். அதில் ஜெர்மனியிலிருந்து இறக்குமதிசெய்யப்பட்ட ஆர்க்கைவல்பேப்பர்களிலும் கான்வாசிலும் ஓவியங்களை ஒத்த அற்புத பிரிண்ட்டுகள் ஜெயராம் கையால் போடப்பட்டு அவர் வடிவமைத்தபடி சட்டகப்படுத்தப்பட்டன.

நிலப் பரப்புகளும் நீர்ப் பரப்புகளும் எப்போதும் அவரைக் கவர்ந்தவை. கேரளம், கபினி, பரத்பூர் மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடர், நீலகிரி மலைப்பகுதி செங்கல் தேரி, அகஸ்தியர் முடி போன்று இந்தியவின் பல்வேறு பகுதிகளின் மயக்கும் நிலப்பரப்புகளை அவர் காமெராவில் தொடர்ந்து பதிவு செய்துகொண்டிருந்தார். வானும் மேகங்களும் அவரின் தினசரி பார்வைக்கானவை. அந்தி வானம் அவருக்கு பரவசத்தைக் கொடுப்பது. அதன் நிறங்களை அவரால் ஃபிலிம் காமெராவில் சரியாகப் பதிவு செய்யமுடியவில்லை என்ற வருத்தம் இருந்தது. டிஜிடல் காமெராவிற்கு மாறியபிறகு அந்த வண்ணங்களை அப்படியே பதிவு செய்ய முடிந்தது.

2013இல் மூடி லாண்ட்ஸ்கேப்ஸ் (MoodyLandscapes) என்ற தலைப்பில் ஜெயராம் கையால் பிரிண்ட் போடப்பட இயற்கைக் காட்சி புகைப்படங்கள் கோவையின் காண்டம்ப்ளேட் ஓவியக் கூடத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டன. ஒரு மாதகாலம் இந்த ஒரு நபர் கண்காட்சி மக்களின் பார்வைக்கு இருந்தது. கேரளத்தில் கோழிக்கோடில் 2017இல் இந்தப்படங்கள் இதே பெயரில் காட்சிக்கு வைக்கப்பட்டன. ஏராளமானோர் கண்டு மகிழ்ந்ததுடன் கார்ட்டூன் ஓவியக் கலைஞர் உன்னி காமெராவுடன் இருக்கும்



ஜெயராமை அந்த இடத்திலேயே கார்ட்டூனாக வரைந்து பரிசளித்தார். அது ஜெயராமின் கம்ப்யூட்டர் அறையில் பெரிய சட்டகத்தில் சுவரில் மாட்டப்பட்டிருக்கிறது. இறுதியில் ஜெயராம் மறைவுக்கு முன் இக்கட்டுரையில் முதலில் சொல்லியிருப்பதுபோல் ஊட்டியில் இந்த புகைப்படங்களின் கண்காட்சி இரு மாதங்கள் சிறப்பாக நடந்து முடிந்தது.

ஜெயராம் சிறுவயது முதல் புத்தக வாசிப்பில் அதிக நேரம் செலவிடுபவர். கோவையிலிருந்த பை – கோ புத்தகக் கடை உரிமையாளர் அவரின் புத்தகப் பசியை நன்கறிந்தவர். எழுபதிலிருந்து தொண்ணூறுகள் வரை வெளிநாடுகளிலிருந்து அவர் விரும்பிய அனைத்து புத்தகங்களையும் தருவித்துக் கொடுத்தார். இணைய வசதி வந்தபின் புத்தகம் கிடைப்பது எளிதாகிவிட்டது, வீட்டின் மாடியில் அவர் புத்தகங்களை அழகாக அடுக்கி வைத்திருக்கும் புத்தக அலமாரி முக்கியமானது. புத்தக அலமாரியும் அங்கிருந்த நாற்காலி மேசை என ஒவ்வொன்றும் அவருடைய வடிவமைப்பில் வீட்டில் தச்சர்களைக் கொண்டு அவர் உருவாக்கியவை. தச்சுவேலையில் ஆர்வம் கொண்டவர். அதற்குத் தேவையான கருவிகள் கூட வைத்திருந்தார். அந்த மாடி மேசைகளிலும் சிறு அடுக்குகளிலும் அவர் சேகரித்த அழகான கண்ணாடி செராமிக் மண் கலைப்பொருட்கள் வைக்கப்பட்டிருக்கும்.

இசையில்லாமல் அவரில்லை. முதலில் மெலிதான



மேற்கத்திய பாடல்களும் இசையும் இசைத்தட்டுகள் மூலம் கேட்டுக்கொண்டிருந்தார். அடுத்து கர்னாடக இசை. தொடர்ந்து இந்துஸ்தானியில் ஆழமாக இறங்கிவிட்டார். போஸ் ஹெட்போன், ஐபாட் என தினமும் இரவில் உறங்கும் வரை இசையில் மூழ்கியிருப்பார். தன்னிடமிருக்கும் இசைத் தொகுப்புகளைப் பிறருடன் பகிர்வதில் மகிழ்ச்சியடைவார்.

ஐரோப்பிய ஓவியர் ரெம்ப்ராண்ட்டின் ஓவியங்களும் அவர் போன்று ஒளியும் நிழலும் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்ட கான்ஸ்டபிள், வெர்மியர் போன்றவர்களின் ஓவியங்களும் அவருக்கு முக்கியமானவையாக இருந்தவை. நவீன ஓவியங்களிலிருந்து முற்றிலுமாக விலகி இருந்தார். சில காலத்திற்குப் பிறகு வில்லியம் டர்னரின் மயக்கும் வண்ணக் கலவைகளில் உருவான வானமும் நீரும்





கடலும் கப்பலும் இயற்கையும் அவரை அவர் விரும்பியிருந்த முந்தைய ஓவிய வட்டத்திற்கு வெளியே கொண்டுவந்துவிட்டன. அன்றாடம் காணும் காட்சிகளுடன் பாப்லோ பிக்காசோ, ஜாக்சன் போலக், ஜார்ஜெஸ் ஸூராட், குஸ்தாவ் க்ளிம்ட் ஓவியங்களை ஒப்பிட்டு வெளியான புகைப்படக் கலைஞர் ஆர்ட் உல்ஃபின் (Art Wolfe, 1950) காணொளி அவருக்குப் பிடித்திருந்தது. அனைவருக்கும் பகிர்ந்துகொண்டிருந்தார். மோனே, வான்கோ என இம்ப்ரெஷனிச ஓவியங்களில் ஆர்வம் அதிகமானது. தைல (Oil) வண்ணங்களிலிருந்து அக்ரிலிக் வரை ஒவ்வொரு வகை வண்ணங்களின் உருவாக்கத்தைப் பற்றியும் துரிகைகளைப் பற்றியும் ஆழ்ந்த அறிவு கொண்டவர்.

சினிமாவும் அவரைக் கவர்ந்த கலைகளில் ஒன்று. கோணங்கள் திரைப்பட சங்க திரையிடல்கள், ஓவியகூடத் திரையிடல்கள் பிற நிகழ்வுகள் அனைத்திலும் அவருக்கு முக்கிய இடமுண்டு. ப்ரொஜெக்டரில் அவருடன் இணைந்து வண்ணத் திருத்தம் (Colour Correction) செய்வது தனி அனுபவம். எங்கள் அனலாக் ப்ரொஜெக்டர் உயர்தர டிஜிட்டல் கருவியை மிஞ்சிவிடும் அளவுக்குத் திரையில் படிமங்களை வெளிப்படுத்தும். கோணங்கள் சார்பில் பி.எஸ்.ஜி. கலைக்கல்லூரியில் நடந்த 'Art of Cinema' நிகழ்ச்சியில் டியரென்ஸ் மாலிக் இயக்கிய 'Days of Heaven' படத்தின் சிறப்பான காட்சி ஒன்றை திரையில் நிறுத்தி ஜெயராமை அதைப் பற்றிப் பேசக் கேட்டுக்கொண்டோம். அக்காட்சியில் வண்ணங்களும் ஒளியும் நிழலும் பயன்படுத்தப்பட்டிருக்கும் முறையை அவர் அன்று விவரித்ததை என்றும் மறக்கமுடியாது. மாணவர்கள் அவர் பேச்சில் மயங்கிவிட்டனர். அவருக்கு கருப்பு வெள்ளைப் படங்களும் மிகவும் பிடிக்கும். ஆர்சன் வெல்ஸ்ஸின் 'சிட்டிசன் கேன்' படத்தில் க்ரெக் டோலண்ட் ஒளிப்பதிவில் உருவான காட்சிகளின் கருப்பு வெள்ளை ஒளிப்பதிவை அவர் விவரிப்பதை கேட்டுக்கொண்டே இருக்கலாம்.

கோவையிலிருந்து எளிதில் செல்லமுடிந்த நீலகிரி, சைலண்ட் வேலி (Silent Valley) பகுதிகளுக்கு ஜெயராம் அடிக்கடி செல்வதுண்டு. அப்பகுதி வனங்களில் தொடர்ந்து சிறு உயிரினங்களுடன் விலங்குகள், இயற்கைக் காட்சிகள் எனப் பலவற்றைப் படம்பிடித்தார். அந்தப் பகுதிகளிலும் கேரளாவிலும் அவருக்கு உதவ நண்பர்கள் ஆவலுடன் காத்திருப்பர்.



நிறைவான வாழ்க்கை, பலருக்கு உதவிய கனிவான உள்ளம். வாழ்க்கையில் எந்த துன்பத்தையும் எந்த அவமதிப்பையும் எந்த வேதனையையும் கடந்து உடனே அமைதி அடைந்துவிடும் முதிர்ச்சியும் உள உரமும் கொண்டவர். இந்த 2023 ஆகஸ்ட் 3ஆம் தேதி அவருக்கு 75 வயது நிறைய வேண்டியது. மன உறுதியோடும் வழக்கமாக வெளிப்படுத்தும் ஒரு வரிச் சிரிப்புகளோடும் இருந்த இந்தக் கலைஞனின் பயணம் சில நாட்களுக்கு முன் நிறைவுற்றது. ஒருவரும் எதிர்பாராத நேரத்தில் அவர் வாழ்க்கை ஜூலை 2ஆம் தேதி திடீரென முடிந்துவிட்டது. அவர் இயற்கையின் புதல்வர். இயற்கைக்காக தன் வாழ்நாளை அர்ப்பணித்த இந்த உன்னத புகைப்படக் கலைஞனை இயற்கை என்றும் மறக்காது. இயற்கையின் இறுதிவரை ஜெயராமின் சிலந்திகளும் தவளைகளும் அவர் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கும்.

"ஆனந்த்" <anandsiga@gmail.com>



பி.என்.எஸ்.தேவ் (முன்னாள் கொரெயா மஹாராஜா) இளம் வயதிலிருந்து அவருடைய வழிகாட்டி. டி.என்.ஏ பெருமாள், ஹனுமந்த ராவ் போன்ற இந்தியாவின் மிகச் சிறந்த இயற்கை புகைப்படக் கலைஞர்கள் அவருக்கு நெருக்கமானவர்கள். பெருமாளும் ஜெயராமும் இணைந்து பல கானகப் பயணங்கள் மேற்கொண்டுள்ளனர். தியடோர் பாஸ்கரனுடன் இணைந்து இயற்கை பதிவுகளின் முன்னோடி எம்.கிருஷ்ணனின் புகைப்படங்களை மீண்டும் பதிப்புக்கொண்டுவருவதில் உதவிக்கொண்டிருந்தார்.

ஜெயராம் பற்றி அவரின் ஏராளமான படங்களுடன் கூடிய காணொளி:

https://www.youtube.com/watch?v=bmFmiB2Wd_Q&t=257s

# ச. ஆனந்தகுமார் கவிதைகள்

## 1. சொட்டும் நினைவுகள்

சாளரத்தின் கம்பிகளில் படிந்து
விடாமல் சொட்டுகிற
மழைத்துளிகளென நினைவுகள்
பனியென இறுகி அமர்ந்திருந்தாலும்
அனிச்சையாய் இளகியெனை
உட்கொள்கின்றன.

மறத்தலின் எல்லைகள் கடந்து
திரும்ப திரும்ப நினைத்தலென்கிற
மென்பொருளை நுண்சில்லுகளாய்
தைத்து விட்டான் படைத்தவன்.

மகரந்தங்களின் கூட்டமைப்பில்
மையம் கொண்டு அமர்ந்திருக்கிறது
நினைவுகளெனும் இனிப்பு

புலனத்தில் உட்புகுந்து
உனை அடைய வழிகளில்லை
வார்த்தைகளுக்கு வலியை
முழுமையாய் மொழிபெயரக்கத்தெரியவில்லை..

மெய்நிகர் தொடர்புகள்
தோளில் சாய்கிற நிம்மதியை
நிரம்புவதில்லை..
இதயம் கேட்டு வேலை செய்யாததால்
எதிர்காலத்திற்கென
நிகழ்காலத்தை இருட்டாக்கி
நாடு விட்டு நாடு கூடு
பாய்ந்து விட்டாய்

விடாமல் சொட்டிக்கொண்டிருக்கிறது
கொஞ்சமாய் வாழ்ந்த
நினைவுகள்.

## 2. மகிழ்ச்சி

கைகளில் அமர்ந்திருந்தது
குழந்தை
தாமரைப்பூ
அங்கும் இங்கும் ஓடுகிற முயல்
கவிதை புத்தகம்
பிரிவுக்கு முன் கிடைக்கிற முத்தம்
போல
வரையரைக்குள் சிக்காத சந்தோஷம்

கைகளில் இருந்தது பரிசு
பிரித்து பார்க்க பரபரத்தது மனது

ஒருவேளை முதல் முறை
பிரித்தவுடன் கிடைக்கிற
மகிழ்ச்சி
சில மணித்துளிகளில்
நாழிகைகளில்
நாட்களில் தொலைந்து போக
வாய்ப்பிருக்கிறது

மகிழ்ச்சியென்பது
எல்லைகளில்லாதது

பரிசென்னவென பார்ப்பதில்
சிக்கல்கள் இருக்கினறன

நிறம் தரம் என
ஏதாவதொன்று பிடிப்பதை போலவே
பிடிக்காமல் போகவும்
வாய்ப்பிருக்கிறது
அல்லது மகிழ்ச்சியின்
அளவை கழித்துவிடும்

பரிசு கிடைத்ததென்பதில்
இருக்கிற மகிழ்ச்சி
நிரந்தரம், பிரித்து அது
பொருளாய் இடம்பெயராதவரை

அப்படியே இருக்கட்டும்
கைகளிலும் மனதிலும்

ச. ஆனந்தகுமார் <vidaniru@gmail.com>

# தருமமிகு சென்னை

சந்தியா நடராஜன்

## *1.* விமான நிலையம் என்னும் விண்ணகரம்

எனக்கு ஏழெட்டு வயதிருக்கும்.

ஒருநாள் என் வயதொத்த சிறுவர்கள் வானில் ஒரு 'ஏரோப்ளேன்' பறப்பதைக் கண்டு தெருவில் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள்.

நானும் அந்தப் பரவசத்தில் பங்கு கொண்டேன். மேகக் கூட்டங்களுக்கு அப்பால் எங்கோ ஒரு விமானம் செல்வது கண்களுக்குப் புலப்பட்டது. அது ஒரு 'ஏரோப்ளேன்' பொம்மை போலத்தான் தெரிந்தது. எல்லோரும் 'பூப்போடு பூப்போடு' என்று கூவினார்கள். தெற்காக ஏன் அந்த விமானம் பூப்போட வேண்டும் என்று இன்றுவரை எனக்குத் தெரியவில்லை.

அதற்குப் பிறகு என் இருப்பதைந்தாவது வயது வரையில் பறக்கும் விமானம் எதுவும் என் பார்வையில் விழுந்ததில்லை. 'சிவந்த மண்'ணிலும் 'வசந்த மாளிகை'யிலும்தான் வெள்ளித்திரை விமானங்களைக் கண்டிருக்கிறேன். அந்தத் திரைப்படங்கள் விமானப் பணிப்பெண்களை இந்திரலோகத்துப் பெண்களாக மனதில் பதிய வைத்திருந்தன. விமானத்தில் பயணம் செய்பவர்களைப் 'பெரும்புள்ளி'களாகவே கற்பனை கண்டுகொண்டிருந்தது. விமானப் பயணம் குறித்து யோசித்தால் பயமும் திகிலும் முன்வந்து நிற்கும்.

1985 மார்ச் மாதம் 4ஆம் தேதி சென்னைக்கு வந்து சென்னைத் துறைமுகத்திற்கு எதிரேயுள்ள சுங்க இல்லத்தில் சுங்க அதிகாரியாகச் சேர்ந்தேன். துவக்கத்தில் சுங்கத் துறையின் எல்லாப் பிரிவுகளிலும் பயிற்சி அளிக்கப்பட்டது. இறுதியாகச் சென்னை விமான நிலையத்திற்கு என்னை அழைத்துச் சென்றார்கள்.

வெள்ளைச் சீருடையில் 'அசோகச் சிங்கம்' சிரிக்கும் கேப் அணிந்துகொண்டு மீனம்பாக்கம் விமானநிலையத்திற்குள் நுழைந்தேன். அது பழைய விமான நிலையம். இன்று அது 'கூரியர் டெர்மினல்' ஆகிவிட்டது. பயணிகளுக்கு இடமில்லை. பார்சல்கள் வந்துபோகும் ஜட விமானதளமாகிவிட்டது. விமானநிலையக் கட்டடத்துக்கு உள்ளும் புறமும் தமிழ்நாடு போலீஸ்தான் காவல் பணியில் இருந்தது. வெளியே கருப்பு மஞ்சள் கலரில் பழைய 'பியட்' வாடகைக் கார்கள் வலம்வந்து கொண்டிருந்தன. இரண்டு சுங்க அதிகாரிகள்தான் காரில் பணிக்கு வருவார்கள். பயணப் பெட்டிகளை எடுத்துச் செல்லும் டிராலிகள் வரிசையாகவும் சிதறியும் கிடந்தன.

விமான நிலையத்தின் 'வருகைக் கூட'த்திற்குள் நுழைந்தவுடன் பரவசம் பற்றிக்கொண்டது. வெள்ளைச் சீருடையில் சுங்க அதிகாரிகள் அங்குமிங்கும் நடமாடிக்கொண்டிருந்தனர். புதியவனான என்னைச் சக அதிகாரிகள் யாரும் கைகுலுக்கி வரவேற்கவில்லை. பாச உணர்வுக்கு வழியில்லை என்றாலும் பரவாயில்லை, பயஉணர்வு மேலிட்டது. பணிவுதான் சீருடைப் பணியின் லட்சணம் என்று சூழ்நிலை சொல்லிக் கொடுத்தது. ஓடுபாதைக்கருகில் நிற்கும் ஓரிரு விமானங்களைக் கண்ணாடிச் சுவர் வழியே பார்க்கமுடிந்தது.

விமானநிலைய சுங்கத்துறை அஸிஸ்டென்ட் கலெக்டர் முன்பு ஆஜரானேன். அதிகம் பேசாத ஆபிஸர் அவர். தலையசைத்து விடை கொடுத்தார். மாநகரம் எனக்குப் புதியதுதான்; விமான நிலையமோ விநோதமாகக் காட்சியளித்தது.



ஏர் இந்திய நிறுவனத்தின் விமான நிலையப் பெண்கள் சிவப்பு நிறப் புடவைகளில் தென்பட்டார்கள். சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் பெண்கள் குட்டைப் பாவாடைகளில் குறுக்கும் நெடுக்கும் குதிகால் உயர்ந்த காலணிகளுடன் குமிழ் சிரிப்புடன் தலையசைத்துத் தோள் குலுக்கிப் பயணிகளுக்குப் பதில்




சென்னை விமான நிலையம், 1960

சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஏர்லைன்ஸின் எல்லாப் பெண்களும் உடுப்பிலும் எடுப்பிலும் நகல் எடுத்ததுபோல் காட்சியளித்தார்கள். இடரினும் தளரினும் இன்முகத்துடன் பணிபுரிதல் பதவிப்பயன் என்பதை பறக்கும் பணிப்பெண்களிடமிருந்தும் விமான நிலைய கவுன்டர்களில் பயணியர் பணியில் ஈடுபடும் விமானநிறுவனப் பணியாளர்களிடமிருந்தும் தான் நான் கற்றுக்கொண்டேன். நள்ளிரவு நேரத்திலும் கசங்காத முகங்கள்; நடையிலும் உடையிலும் மிடுக்கு, கோபம் தலைக்கேறிக் கடுஞ்சொற்களைக் கொப்பளிக்கும் பன்னாட்டுப் பயணிகளிடம் கனிவு ஒன்றையே மறுமொழியாகக் கற்றுக் கொடுத்திருக்கும் இந்த விமான நிறுவனங்களிடம் நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை அதிகம் உண்டு. இந்த உணர்வே இன்று வரை என் உலகத்தில் தொடர்பறாமல் இருப்பவர்களில் ஏர்லைன்ஸ் நண்பர்களின் எண்ணிக்கை குறைவுபடாமல் இருப்பதற்குக் காரணம்.

முழுவதும் குளிரூட்டப்பட்ட வருகைக் கூடத்தில் நானும் அங்குமிங்கும் பழக்கப்பட்டவன்போல நடந்துகொண்டிருந்தேன். சற்று நேரத்தில் மலேசியன் ஏர்லைன்ஸ் விமானம் தரையிறங்கப் போவதாக ஒலிபெருக்கி அறிவித்தது. அதே நேரத்தில் கள்ளழகர் பவனி வரும் குதிரையைப் போல ஓடுபாதையில் 'மாஸ்' விமானம் தன் முகத்தை விண்ணோக்கி உயர்த்தியபடி தரைதொட்டு விரைந்தோடிக் களைப்பற்றுத் தன் வேகம் குறைத்து மெல்லத் திரும்பி ஒரு டாக்ஸியைப் போல மெதுவாக வந்து நிற்கவேண்டிய இடத்தில் ('பே') நின்றது. அதன் இரைச்சல் மட்டும் நிற்கவில்லை. விமானநிலையக் கட்டிடத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் நின்றிருந்த விமானத்தை நோக்கி இரண்டு ஏணிப்படி' (Step ladder) வாகனங்கள் நகர்ந்து சென்று விமானத்தின் முன்புற, பின்புறக் கதவுகளுடன் ஏணிப்படிகளைப் பொருத்தின. விமானப் பயணிகள் ஏணிப்படிகள் மூலம் இறங்கி வந்து அங்கு நின்று கொண்டிருந்த பேருந்துகளில் ஏறி விமான நிலையத்திற்கு வந்தார்கள்.

இப்போது ஏணிப்படி வாகனங்களின் காலம் மலையேறிவிட்டது. விமானநிலையக் கட்டடத்தை ஒட்டியே விமானங்கள் வந்துவிடுகின்றன. ஏர்வே பிரிட்ஜ் மூலம் பயணிகள் விமானத்திலிருந்து வந்து சேர்கிறார்கள்; விமானத்திற்குள் போய்விடுகிறார்கள். ஏர்வே பிரிட்ஜ்களிலும் விமானங்கள் நிற்கும்போது அடுத்து வரும் விமானங்களுக்குத் தான் ஏணிப்படி வாகனங்கள் தேவைப்படும்.

முதல் முறையாக ஒரு விமானத்தைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தேன்.

வருகைக் கூடத்திலிருந்து பத்துபடிகள் மேலே ஏறி கீழே இறங்கி இமிகிரேஷன் பகுதிக்கு வந்தேன். பயணிகள் வரத்தொடங்கினார்கள். அந்தப் பயணிகள் எல்லாம், சினிமா நட்சத்திரங்களாகவும் பெரும் தொழிலதிபர்களாகவும் படோடபமானவர்களாக இருப்பார்கள் என்று மனம் கனவு கண்டது.

இமிகிரேஷன் பகுதியில் மூன்று அதிகாரிகள் தான் பயணிகளின் கடவுச்சீட்டுகள் பரிசோதித்தபடி இருந்தார்கள். அதாவது மூன்று வரிசைகளில் பயணிகள் நின்று கொண்டிருந்தனர்.

முதல் வகுப்புப் பயணிகள் கடந்த பிறகு வந்த பயணிகளில் சிலரது கோலம் பேருந்து நிலையக் காட்சிகளை நினைவூட்டியது. தலைச்சுமையுடன் வந்த ஒருவரைக் கண்டவுடன் எனது முன் அனுமானங்கள் முறிந்து விழுந்தன. இன்னும் சில இளைஞர்கள் ஒற்றைக் கைப்பையுடன் வந்தார்கள். அவர்கள் தலை மொட்டையடிக்கப்பட்டிருந்தது. எந்த விதத்திலும் அவர்களிடம் ஒரு விமானப் பயணிக்குரிய குறைந்தபட்ச லட்சணம் எதுவும் இல்லை. அவர்கள் எல்லோரும் டூரிஸ்ட் விசாவில் மலேசியா சென்று உரிய அரசு அனுமதி இல்லாமல் அங்கேவேலை செய்து வந்த தொழிலாளர்கள் என்பது தெரிய வந்தது. வாழ்வில் எப்படியாவது கடைத்தேற வேண்டும் என்று பெரும் கனவுடன் அவர்கள் தமிழகத்தின் கடைக்கோடி கிராமங்களிலிருந்து கடன் வாங்கிக் கடல் கடந்தவர்கள். 'அயல்நாடுகளில் வேலை' என்ற விளம்பரங்களால் ஈர்க்கப்பட்டு மோசடி ஏஜன்ட்களின் சதிவலையில் சிக்கியவர்கள். வாழத் தகுதியற்ற வாழிடங்களில் தங்கி வேலை செய்தவர்கள். இறுதியில் சட்டத்திற்குப் புறம்பாகக் குடியேறியவர்களாகக் குற்றம்சாட்டப்பட்டு மலேசியாவில், சிறைத்தண்டனை பெற்றவர்கள். சிறையில் கசையடியும் உண்டு. உள்ளூரில் ஏஜென்ட்டுகளால் மொட்டையடிக்கப்பட்டவர்களை மலேசிய போலீஸ் மழுங்க மழுங்க மொட்டையடித்து இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பிக் கொண்டிருந்தது.

மீண்டும் பயணிகள் சுங்கச் சோதனைக்கு ஆட்படும் வருகைக் கூடத்திற்கு வந்தேன். பயணியர்களின் பதிவு செய்யப்பட்ட உடைமைகள் விமானத்திலிருந்து இறக்கிக் கொண்டுவரப்பட்டு கன்வேயர் பெல்ட்டுகளில் போடப்பட்டன. பயணப் பொதிகளுடன் சுழன்று கொண்டிருந்த நீண்ட கன்வேயர் பெல்ட்டுகளைச் சுற்றித் தத்தம் உடைமைகளை எடுத்துச் செல்ல பன்னாட்டுப் பயணிகள் பொறுமையுடன் காத்திருந்தனர்.

1980களின் முற்பகுதியில் சென்னை விமான நிலையத்தில் பயணப் பெட்டிகளைச் சோதனை செய்யும் ஸ்கேனிங் கருவிகள் அறிமுகமாகவில்லை.

தமது பெட்டிகளைச் சேகரித்துக் கொண்ட பயணிகள் சுங்க அதிகாரிகள் முன்பு சோதனைக்காகக் காத்திருந்தார்கள். வேடனைக் கண்ட மானின் மருட்சி அவர்கள் கண்களில் குடிகொண்டிருந்தது. ஒவ்வொரு சுங்க மேஜைக்கு வெளியிலும் ஒரு வெள்ளுடை வேந்தர் (சுங்கக் கண்காணிப்பாளர்) ஓர் உயர்ந்த இருக்கையில் அமர்ந்தபடி சோதனைக்கு வரும் பயணியிடம் அவர் கொண்டு வந்திருக்கும் பொருட்களின் மொத்த மதிப்பைக் குறிப்பிட்டிருக்கும் படிவத்தில் கையெழுத்திட்டுக் கவுன்டருக்கு உட்புறம் நிற்கும் அதிகாரியிடம் கொடுத்தார். பயண உடைமைகள் திறக்கப்பட்டுச் சோதனையிடப்பட்டது. பயன்படுத்தப்பட்ட பொருட்கள் அல்லாமல் புதிதாக வாங்கிவரப்பட்ட பொருட்களின் பட்டியல் அனுமார் வால் போல், மளிகைக் கடைக்காரர் பட்டியல் போல, தீபாவளிக்கு வாங்கும் பட்டாசுப் பட்டியல் போல நீண்டு கொண்டே போனது. அப்போது சுங்கத் தீர்வையின்றி விமான நிலையத்திலிருந்து வெளியேற வேண்டுமானால் ஒரு பன்னாட்டுப் பயணி கொண்டுவரும் பொருட்களின் மதிப்பு 1200 ரூபாய்க்கு மிகாமல் இருக்க வேண்டும். ஒரு லிட்டர் மதுவும் ஒரு கார்ட்டன் சிகரெட்டும் கொண்டு வரலாம்.

1980களில் 'சைனா சில்க்' என்ற பளபளக்கும், கண்ணைப் பறிக்கும், கண்ணைக் கூசவைக்கும் புடவைகள் சிங்கப்பூர், மலேசியப் பயணிகள் கொண்டு வரும் பொருட்களில் பிரதானமானவை. ஜப்பானில் தயாரிக்கப்பட்டு ஓரங்களில் தமிழ்ப் பெயர்களுடன் வரும் புடவைகளுக்கும் தமிழ்நாட்டில் மவுசு அதிகம். சென்னை பர்மா பஜாரில் இவற்றை வாங்கவரும் ஆந்திர தேசத்து மகளிரைக் கண்டுவிட்டால் பஜார் வியாபாரிகளுக்குக் கொண்டாட்டம்தான். என்ன விலை சொன்னாலும் வாய் பேசாது வாங்கிச் செல்லும் மகளிர் குழாம் அது.

ஒரு சேலையின் சுங்க மதிப்பு 100 ரூபாய் ஒரு பயணி ஐந்தாறு சேலைகளும் ஐந்தாறு பேண்ட் பிட்களும் யார்ட்லி பவுடரும் ஒரு டஜன் ரெட் லீப் பால்பாயின்ட் பேனாக்களும் கொஞ்சம் சாக்லெட், பிஸ்கட் வகைகளும் கொண்டு வந்தாலே அவற்றின் மதிப்பு 1200 ரூபாயை எட்டிவிடும். மற்ற பொருட்களுக்கான சுங்கத் தீர்வை மருண்ட மானை மயக்கத்தில் ஆழ்த்திவிடும்.

'எல்லாம் எங்களுக்காக வாங்கி வந்தது சார். வெளிநாடு போயிட்டு வந்திய... என்ன வாங்கிட்டு வந்த என்று உறவுக்காரர்களும் கேட்பாங்கதான சார்... எதுவும் விக்கறதுக்கு வாங்கினது இல்ல சார்' என்று முறையிடும் பயணிகள் முகத்தை ஏறிட்டுப் பார்க்க அவகாசம் இல்லாமல் வேலை செய்து கொண்டிருப்பார்கள் அதிகாரிகள்.

இரண்டாயிரம் ஆண்டுகள் பழமையான துறை சுங்கத்துறை. ஈறாயிரம் ஆண்டுகளுக்கு முன் அரசாண்ட சோழ மன்னன் கரிகாலன் என்கிற திருமாவளவனின் சுங்க அதிகாரிகள், மடல் கொண்ட தாழை மல்கியிருக்கும் பூம்புகார் நகரத்துக் கடற்கரையில் உள்ள அகன்ற தெருக்களில், மன்னனின் நிதிவளம் பெருக்கக் கடும்சினம் கொண்ட கதிரவனின் தேரில் பூட்டிய புரவிகளைப் போலச் சுங்கவரி வசூலித்தார்கள் என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய 'பட்டினப்பாலை'யில் பதிவாகியிருக்கிறது.

அந்த வேகம் இன்னும் இருந்துகொண்டே இருக்கிறது. இன்றுவரை மத்திய அரசின் வருவாயில் பெரும்பகுதி சுங்கம் மற்றும் கலால் துறையின் மூலம்தான் கிடைக்கிறது. சமீபத்தில் கலால்துறை ஜிஎஸ்டி துறையாகப் பெயர் மாற்றம் கண்டிருக்கிறது. வேலை ஒன்றுதான். சுங்கத் துறை தனது தனித்துவத்துடன் இயங்கி வருகிறது.

அடிக்கடி சிங்கப்பூர் மலேசியா சென்று அங்கிருந்து வியாபாரச் சாமான்களைக் கொண்டு வரும் பயணிகள் சிலர் இருந்தனர். அவர்களைத் தீவிரச் சோதனைப் பகுதிக்குச் சுங்கக் கண்காணிப்பாளர்கள் அனுப்பி வைத்துக் கொண்டிருந்தார்கள். அப்பகுதிக்கு வரும் வியாபாரிகளின் பெட்டிகள் தலைகீழாகக் கவிழ்க்கப்பட்டு அக்குவேறு ஆணி வேறாகக் குடைந்து எடுத்து மதிப்பீடு செய்யப்பட்டன. அவர்களுக்குத் தண்டமும் அபராதமும் விதிக்கப்படும். விதிமீறியவர் மீது விதிக்கப்படுவது தண்டம் (Penalty). விதிமீறிக் கொண்டுவரப்பட்ட பொருட்கள் மீது விதிக்கப்படுவது அபராதம் (fine). 80களில் மறைத்துக் கடத்தி வரும் பொருட்கள் அல்லது முறையாகச் சுங்க அதிகாரியிடம் தெரிவிக்காத பொருட்களின் மதிப்பு பத்தாயிரம் ரூபாயைத் தாண்டும் பட்சத்தில் வானத்தில் பறந்து மத்திய சிறைச்சாலைக்குப் பயணப்படவேண்டி வரும்.

அப்படித்தான் மலேசியச் சிறையிலிருந்து மொட்டைத் தலையுடன் வந்தவர்களில் இருவர் மாட்டிக் கொண்டார்கள். ஒருவர் மன்னார்குடியில் சைவ ஹோட்டல் ஒன்றில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர். இன்னொருவர் ஒரத்த நாட்டைச் சேர்ந்தவர். மலேசியச் சிறையிலிருந்து விடுதலையாகித் தாயகம் திரும்ப கோலாம்பூர் விமான நிலையத்திற்கு வந்திருக்கிறார்கள். அந்த விமான நிலையத்திற்கு வெளியே இருந்த முன்பின் தெரியாத ஒருவர், ஆளுக்கு ஒரு ‘P’ பேக் ஒன்றைக் கொடுத்துச் சென்னைக்கு எடுத்துச் செல்லும்படியும், அவற்றை விமானநிலையத்திற்கு வெளியே காத்திருக்கும் நபர் அவர்களை அடையாளம் கண்டு வாங்கிக் கொள்வார் என்றும், அவர்களிடம் சென்னை நபர் தலைக்கு 1000 ரூபாய் தருவார் என்றும் கூறி அந்த ‘P’ பேக்குகளை ஒப்படைத்திருக்கிறார்.

‘P’ பேக் என்பது ‘P’ என்ற எழுத்து பையின் இருபுறம் முழுவதும் காணப்படும் ஒரு கைப்பை. 80களில் பிரபலம். இவர்களும் அதை அப்படியே நம்பி யிருக்கிறார்கள். சுங்க அதிகாரிகளின் சோதனையின் போது ஒவ்வொரு பேக்கிலும் ஒரு எமர்சின்ஸி லைட் இருந்திருக்கிறது. அந்த எமர்சன்ஸி லைட்டுகளில் தங்கம் மறைத்து வைக்கப்பட்டிருப்பதைச் சுங்க அதிகாரிகள் கண்டுபிடித்துக் கைப்பற்றியிருக்கிறார்கள். அவ்வளவுதான். மலேசியச் சிறையிலிருந்து வந்தவர்கள் சென்னை சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார்கள்.

இப்படி ஏமாந்துபோன எளியவர்களின் கண்ணீர்க் கதைகள் 1995 வரை சென்னை விமானநிலையத்தில் சுங்கத் துறையினர் பதிவு செய்யும் வாக்குமூலங்களில் தொடர்ந்து பதிவாகி வந்தன. திறந்தவெளிச் சந்தை உருவானபின், சுங்கச்சட்டங்கள் தளர்த்தப்பட்டபின் கடத்தல் தொழில் நசிந்து போனது. கடந்த 25 ஆண்டுகளாக ‘மொட்டைத் தலை’ பயணிகளை சென்னை விமானநிலையம் வரவேற்கவில்லை என்பது மகிழ்ச்சியான செய்தி.

மலேசியாவிலிருந்து வரும் தமிழர்கள் தங்கள் நாட்டுக்கே உரித்தான பலவண்ணச் சட்டைகளை அணிந்து வந்து தங்களை அடையாளப்படுத்திக் கொள்வார்கள். பெண்களின் தோற்றத்தில் ஒரு அந்நியத்தன்மை கலந்திருக்கும். தமிழில் பேசினாலும் பேசும் தொனியிலும் மொழிநடையிலும் வித்தியாசமிருக்கும் ‘whatla, whyla’ (வாட்லா, ஒய்லா) என்ற வார்த்தைகள் பொங்கிவழியும். பாஸ்போர்ட்டைப் பிரித்தால் அவர்களின் பெயர்கள் மாரியாயி, சின்னாயி என்றெல்லாம் தமிழ் மணக்கும்.

1985இல் சென்னை விமான நிலையத்தில் சிங்கப்பூர் ஏர்லைன்ஸ், மலேசியன் ஏர்லைன்ஸ், ஸ்ரீலங்கன் ஏர்லைன்ஸ், ஏர் இந்தியா என நான்கு விமான கம்பெனிகளின் விமானங்கள்தான் இயங்கிக் கொண்டிருந்தன. கொழும்பிலிருந்து வரும் விமானங்கள் மூலம் அதிகபட்சம் 200க்கும் குறைவான பயணிகளே வருவார்கள். கொழும்புப் பயணிகளின், பயணச் சுமைகள் பரிசோதிக்கப்படும்போது வருகைக்கூடம் முழுவதும் கிராம்பு வாசனை வீசும்.

சிலோன்காரர்களுக்குச் சென்னையில் பணம் ஈட்டித்தரும் பொருள் கிராம்பு. கிராம்புப் பைகளில் ஓரிரண்டு ஜான்வாக்கர் விஸ்கி பாட்டில்களும் மறைத்து வைக்கப்பட்டிருக்கும். அவை கைப்பற்றப்பட்டால் சுங்க அதிகாரிகளிடம் தமது மன்றாட்டைத் தொடங்குவார்கள். “அங்கதான் கரைச்சல் என்று இங்கு வந்தால் இங்கேயும் கரைச்சல். நாங்கள் பாவம்தானே” என்று கதைத்துப்போடுவார்கள். இப்படி கிராம்பு கொண்டு வருபவர்களில் சிங்களப் பெண்களும் ஈழத்தமிழ்ப் பெண்களும் இருப்பார்கள். அவர்கள் எல்லாம் சென்னைக்கு சீசன் டிக்கட் வாங்காத குறையாகத்தான் இருக்கும். எல்லோரும் மண்ணடியில்தான் தங்குவது வழக்கம் திரும்பிப் போகும்போது லுங்கிகளும் சேலைகளும் வாங்கிப் போவார்கள். அவை மூட்டை மூட்டையாக டிராலிகளில் அடுக்கப்பட்டிருக்கும். சிலோன் பெண்கள் ஸ்கர்ட்டும் சட்டையும் அணிந்தபடி ஈழத்தமிழில் உரையாடுவார்கள். அவர்களில் மெலிந்த பெண்களைப் பார்ப்பது அரிது.

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் மற்றும் மலேசியன் ஏர்லைன் விமானங்கள் வந்தவுடன் ஒருமணி நேரத்தில் பயணிகளை ஏற்றிக்கொண்டு திரும்பிவிடும். ஆதலால் அந்த விமானங்களின் பைலட்டும் பணிப்பெண்களும் சென்னைக் காற்றைச் சுவாசிக்காமல் போய்விடுவார்கள். ஏர் இந்தியா

மற்றும் இந்தியன் ஏர்லைன்ஸ் பணிக்குழுவினர் மட்டும் சுங்க அதிகாரிகள் முன்பு வந்துநின்று உரிய அனுமதி பெற்று வெளியேறுவார்கள்.

ஒவ்வொரு விமானமும் வந்திறங்கி அந்த விமானப் பயணிகள் வருகைக்கூடத்தில் வந்து சேரும்போது விமான நிலையத்தின் வண்ணமும் வனப்பும் மொழியும் மாறிக் கொண்டே இருக்கும்.

நிலவுலகின் விண்ணகரமாய் நிலைபெற்றிருக்கிறது விமானநிலையம். இங்கே தேவர்களோடு அசுரர்களும் இருப்பார்கள். தேவதைகளுக்குக் குறைவில்லை. ஆனால், பூச்சூடிய பெண்களைத் தான் பார்க்கமுடிவதில்லை. இக்குறையை நீக்குவதற்கென்றே இந்து என்ற ஏர் இந்தியாவின் அலுவலர் இரண்டு முழம் மல்லிகைப் பூவுடன் நடமாடிக் கொண்டிருப்பார். இப்போது அவர் பணி ஓய்வு அடைந்திருக்கலாம். இந்துவின் வாசம் சென்னை விமான நிலையத்தில் எப்போதும் குடிகொண்டிருக்கும்.

(தொடரும்)

சந்தியா நடராஜன் <sandhyapathippagam@gmail.com>

### இலங்கை

# வரலாற்றின் தடங்களை வழிமறித்தல்

## இளங்கோ

Mt. Lavinia: காதலின் வரலாற்று அடையாளம்

ஒரு காதல், அந்தக் காதலியின் பெயரால் ஒரு நகரையே உருவாக்குமா? அப்படி உருவாகிய நகரில், அந்தக் காதலனும் காதலியும் கழித்த அதே மாளிகையில் நானொரு பொழுது இருந்தேன்.

அவன் இலங்கையின் முதல் ஆங்கிலேயக் கவர்னராக இருந்தான். தனது பதவியேற்பு விழாவில் நடனம் ஆட வந்த நடனக்காரி மீது மையல் கொண்டான். அவ்வளவு உக்கிரமான காதல் அது. அவன் நாட்டின் உயர்ந்த பதவியில் இருப்பவன், அவளோ இலங்கையில் ஒதுக்கி வைக்கப்பட்ட தலித் சமூகத்துப் பின்னணியில் வந்தவள். நாடுகளைப் பிடிப்பதில் இரும்பு மனிதன் எனப்பட்ட ஒருவன், மண்ணிற வர்ணம் மேனியில் ஒளிரும் ஒரு பெண்ணின் முன் சரணடைகின்றான். கொழும்பு பெருநகரில் இருந்து அலைகள் கொஞ்சும் கடற்கரையில் ஓர் அரண்மனையைத் அவளுக்காகக் கட்டத் தொடங்குகின்றான்.

அவனது நடனக்கார காதலியை அந்தஸ்து காரணமாக அவ்வளவு எளிதில் அவன் சந்திக்க முடியாது. எனவே, தனது அரண்மனையில் இருந்து 600 மீற்றருக்கும் நீளமான ஒரு சுரங்கப் பாதையை அவளுக்காக அமைக்கின்றான். காதலியின் வீட்டு கிணற்றிலிருந்து தொடங்கி அந்தப் பாதை அவனின் அரண்மனையில் செம்மது சேமிக்கும் நிலவறைவரை நீள்கின்றது.

காதலி இரகசியமாக இரவுகளில் இந்தச் சுரங்கத்தினூடாக வந்து அவனோடு பொழுதைக் கழித்து விட்டு சூரியன் உதயமாக முன்னர் சென்றுவிடுவாள். அந்த உக்கிரக் காதல் 5 வருடங்களுக்கு மேலாக நீண்டது. சூரியன் அஸ்தமிக்காத இராஜ்ஜியம் காலனித்துவப்படுத்திய ஒரு தீவில், ஓர் அரசனுக்குரிய அதிகாரத்தில் இருந்தவனை ஒரு தலித் பெண் தன் நடனமாடிய கால்களில் சரணடைய வைத்தாள் என்பது ஓர் அதிசயமல்லவா?



இந்தக் காதல், பின்னாளில் இளமை துள்ளும் சிலியின் இராஜதந்திரியாக வந்து, ஒரு அருந்தியப் பெண்ணை அவளின் விருப்பமின்றி கொழும்பில் புணர்ந்து போய்விட்ட பாப்லோ நெரூதாவின் உடல் வேட்கையைப் போன்றதல்ல. இது அவ்வளவு பரிசுத்தமானது. காதலி தலித்தாக இருந்ததை உதறித்தள்ளி, உரிய இடத்தை காதலின் பொருட்டு கவர்னரின் நேசம் கொடுத்துமிருந்தது.

திருமணமாகாத அந்த 46 வயது கவர்னரின் காதலை, உள்ளூர்ச் சாதிமான்களாலும் பிரிட்டிஷ் அதிகாரத்தாலும் தாங்க முடியாது போயிருக்கின்றது. ஆகவே, கவர்னரை திரும்பவும் மால்டாவுக்கு (Malta) மீள்க என்று ஆணையை பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியம் பிறப்பிக்கின்றது. காதலியைத் தன்னோடு கூட்டிச் செல்லமுடியாத துயரோடு கவர்னர் திரும்புகின்றான். காதலிக்கு பின்னர் என்ன நடந்ததென்று பல்வேறு கதைகள் சொல்லப்படுகின்றன.

அவள், காதல் பிரிவுத் துயரத்தில் மலையுச்சியில் இருந்து குதித்துத் தற்கொலை செய்தாள் என்பது ஒரு கதை. இன்னொன்று, அவள் இன்னொரு நகரான காலிக்குப் போய் அங்கே வீடு வாங்கி, வசதியாக அமைதியாக இறுதிக் காலத்தில் வாழ்ந்தாள் என்பது இன்னொரு கதை.

எந்தக் கதையானாலும் அவளின் அந்தக் காதல் அவ்வளவு அழகானது. அது எப்படியெனில் அந்த கவர்னர் பிறகு எவரையும் திருமணம் செய்யாமலே அவளின் நினைவோடு அப்படியே ‘பிரமச்சாரி’யாக இறுதி வரை இருந்திருக்கின்றான் என்று வரலாறு எழுதியிருக்கின்றது.

நான் இந்த காதல் மாளிகையின், இப்போது ஹொட்டலாக மாற்றப்பட்டிருக்கும் ஓர் அறையில் இருந்து அலையடிக்கும் கடலைப் பார்த்தபடியிருக்கின்றேன். இந்தக் காதலனும் காதலியும் துள்ளித் திரிந்து காதல் சரசம் செய்த நினைவின் சுவடுகளை எனக்குள் வரைந்து பார்க்கின்றேன். நளினமான



அவளின் நடன உடலில் எத்தனையெத்தனை மீன்கள் துள்ளி ஓடியிருக்கும். எத்தனையோ நாடுகளைக் கடந்துவந்த ஒருவன், அந்தப் பெண்ணின் மேனியில் தன் நிம்மதிக்கான வரைபடத்தைக் கண்டுபிடித்தான் என்பது ஓர் அதிசயமல்லவா? மனிதர்கள் பிரமாண்டமாய் கட்டும் கட்டடங்களை உலக அதிசயம் என்கின்றார்கள்; எனக்கென்னவோ இப்படி நாம் நினைத்துப் பார்க்கவே முடியாத வெவ்வேறு தேசத்து மனித மனங்கள் நேசத்தின் ஆழத்தில் பிணைந்துகொண்டுவாழ்வைக்கொண்டாடுவதுதான் பேரதிசயமாக இருக்கிறது.

ஹொட்டலின் மேற்றளத்திற்குப் போகின்றேன். இப்போது சூரியன் தகதகவெனப் பொன்னிறத்தில் மேற்கில் சாயத் தொடங்குகின்றான். என்றோ ஒருநாள் இப்படி ஆதவன் கடலோடு அணையத் தொடங்குவதை, என்னைப் போல அந்தக் காதலனும் காதலியும் அணைத்திருந்தபடி பார்த்திருப்பார்கள் அல்லவா. அப்போது அவர்கள் தங்கள் காதல் நாளை என்னவாகும் என்று யோசித்திருப்பார்களா? அப்படி யோசித்திருந்தால் அவர்கள் இந்த உக்கிரமான சாகசக் காதலுக்குள் இறங்கியிருக்கவேமாட்டார்கள். உடல் வேட்கை மட்டும் அந்தக் கவர்னருக்கு இருந்திருந்தால் நாங்கள் இப்போது நூற்றாண்டுகள் கடந்தும் இந்தக் காதலைப் பேசிக் கொண்டிருக்கமாட்டோம்.

என் அன்றைய கனவுகளில் இந்தக் காதலனும் காதலியும் சுழன்று ஆடியபடி இருந்தார்கள். சிலவேளைகளில் அது என் கனவில்லாது, நனவிலி மனம் அசைபோட்டதோ தெரியாது. கடந்த நூற்றாண்டுகளில் எத்தனை சுரங்கங்கள் மனிதர்களால் கட்டப்பட்டிருக்கின்றன. ஆனால், ஒரு காதலுக்கெனச் சுரங்கம் கட்டிய இந்த கவர்னர் ஒரு வியப்பல்லவா? பின்னர் வந்த நூற்றாண்டில் அந்தச் சுரங்கம் மூடப்பட்டு, ஒரு பகுதி மட்டும் மிச்சமாக இருக்க, அதன் மீது பெருநகர் கட்டப்பட்டுவிட்டது. ஆனால், அந்தக் காதல் என்றும் அழிக்கப்படாது ஒரு காதலியின் பெயரால் நிமிர்ந்து நிற்கின்றது.

அந்த நகர் Mount Lavinia. அந்த நடனத் தாரகை காதலியின் பெயர் Lavinia!

நான் காலை தூக்கங் கலைந்தபோது மழை பெய்யத் தொடங்கியிருந்தது. எனக்குப் பிடித்தமான சாம்பல் நிறத்தை வானம் போர்த்தியிருந்தது. பெருங்கடலில் மழைத்துளிகள் வீழ்ந்து கலப்பதைப் பார்ப்பது என்பது பேரானந்தமானது. பின்னர் அந்தப் பேரின்ப நிலை மாறி மனது கதகதப்பான தியான நிலையானது.

கடற்கரையில் நடக்க வேண்டும், நீச்சல்குளத்தில் குளிக்க வேண்டும் என்று முதல் நாளிரவு திட்டமிட்ட எல்லாவற்றையும் ஒதுக்கிவைத்து மணிக்கணக்காய் மழைபெய்யும் பரவச நிலையை அனுபவிக்கின்றேன்.

இந்த வாழ்வில் ஒரு மழைத்துளியென நானும் என் வாழ்வும் நாளை சுவடுகளற்றுக் கரைந்து போகும் என நினைக்கையில் எனக்குள் எழுவது அச்சமா அமைதியா என்பதை நான் உணரேன். ஆனால், இந்தக் கணத்தில் அந்தக் காதலின் நூற்றாண்டு காலத் தொடர்ச்சியென என்னை நான் எண்ணிக் கொண்டேன்.

ஆகவேதான் அன்பே, கடல் பார்க்கும் அறைக்குள் இருந்து ஏதெனக் காரணம் தெரியாது விழிக்குள் மழைபெய்ய நானுன்னை நேசத்துடன் இப்போது அணைக்கின்றேன்!

(Sir Thomas Maitland என்கின்ற இலங்கைக்கான முதலாவது ஆங்கிலேய ஆளுநர் (1805-1811), தாழ்த்தப்பட்ட ரொடிய சமூகத்தைச் சேர்ந்த நடனக்காரியான LaviniaAponsuwaவை காதலிக்கின்றார். அந்தக் காதலியின் பெயரால் ஆளுநரின் ஆணை யின்படி MountLaviniaஎன்றழைக்கப்பட்ட நகர் பின்னர் சிங்களத்தில் கல்கிஸ என மாற்றப்பட்டாலும்,



ஆங்கிலத்தில் Mount Lavinia என்றே இப்போதும் அழைக்கப்படுகின்றது. அது காதல் கொடுத்த மாபெரும் அடையாளம்)

### மாத்தளை: பசுமையின் மாபெரும் வெளி

நான் அந்த மலையை நோக்கிப் போனபோது இன்னும் எவ்வளவு தூரம் போகவேண்டும் என்ற நினைப்பே எனக்குள் முதலில் தோன்றியது. மதியத்துக்குப் பிறகு மழை வந்துவிடும் அதற்குள் குறிப்பிட்ட இடத்துக்கு சென்றுவிட வேண்டும் என்று சொல்லப்பட்டிருந்தது. மழை வந்துவிட்டால் மலைக்குப் போவது கடினமாகிவிடும். ஆனால், நான் அந்த நகரத்துக்குள் நுழைவதற்குள்ளேயே மழை தொடங்கிவிட்டிருந்தது.

அந்த மலையில் வசிப்பவர்கள் அநேகமாய் நடந்தே நகரத்துக்குக் கீழிறங்கி வருவார்கள். ஒன்றிரண்டு ஓட்டோக்காரர் மட்டும் அந்த உயரத்துக்கு மேலே ஏறி வரச் சம்மதிப்பார்கள். ஒரு ஓட்டோ என்னை ஏற்றிக்கொண்டு மலைக்கு மழையிடையே ஏற்றிக்கொண்டு போனது. ஓட்டோ ஏறமுடியாத இடங்களும் உண்டு. அப்போது இறங்கி நடந்தால்தான் ஓட்டோ ஒருமாதிரி அந்த செங்குத்துப் பாதையில் மேலே ஏறிப் போகும்.

இடையில் இந்த ஒற்றையடிப்பாதையில் கொஞ்சம் சறுக்கினாலே ஓட்டோ அதலபாதாளத்தில் விழுந்துவிடும் என்று அந்த ஓட்டோக்காரர் பயங்காட்டினார். எட்டிப் பார்த்தபோது எனக்கு பசுமைதான், காதலிகளின் முகங்களைப் போல அழகாய்த் தெரிந்தது. அதல பாதாளம், அவர்கள் காதலின் நிமித்தம் தந்த வலிகளைப் போல மறைந்து இருக்கலாம். அதைப் பற்றிய கவலை இப்போது எனக்கேன் என நிம்மதிப் பெருமூச்சை விட்டேன்.

வழியெங்கும் மரங்களின் கிளைகள் பரவி போகும் பாதையைக் குறுக்கிடச் செய்தன. தலையைப் பத்திரமாக உள்ளே வைத்திருக்க அறிவுறுத்தப்பட்டேன். எப்போதும் பாதை இப்படித்தானா எனக் கேட்டேன். இல்லை, இப்போது மழையின் நிமித்தம் கிளைகளெல்லாம் வளைந்து இப்படி வரவேற்புக் கோபுரங்கள் ஆகிவிட்டன என்றார் அந்தச் சாரதி.

பயணங்களின்போது மட்டுமல்ல, வாழ்க்கையின் எல்லாக் கட்டங்களிலும் எதையோ இழந்துதான் எதையாவது பெறவேண்டியிருக்கும் என நினைப்பதுண்டு. அடையப்படுவதின் பெறுமதி, இழப்பதைவிட மேன்மையுடையதாக இருக்கும்போது மனது நிறைவடைதலின் பூரிப்பில் ததும்பும். அந்தக் கணங்களில், நாம் இழந்தவையும் நமக்கான அடைதல்களுக்குத் துணை செய்தவையே என்ற நன்றியுணர்வு பெருகும். ஒரு காதலின் பிரிவின் வலியைத் தாண்டி இன்னொரு அழகிய காதலைக் கண்டடையும்போது, கடந்து வந்த காதலியை, அவர் பிரியாவிடை தராவிட்டால் இந்தப் புது அனுபவத்துக்கு நுழைந்திருக்கவே முடியாதென்று, அவர் மேல் ஒரு நன்றியுணர்வு தோன்றுவதற்கு நிகர்த்தது இது.

நெடுநேரம் காடுகளில் தொலையும்போதும் கடலில் கரையும்போதும் இவ்வாறான எண்ணம் அடிக்கடி எழும். மேலும் எப்போதும் இந்த இயற்கை நமக்காய்க் காத்திருக்கின்றது. ஆனால், நாம் அதை அனுபவிக்கத் தயாராக இருக்கின்றோமா என்பதுதான் முக்கிய வினா. நாம் வாழும் வாழ்விற்கு நிகரான சமாந்தரமான / இணையான வாழ்வுகள் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. அது எவ்வாறானா யினும் நமக்குப் பிடித்த ஒரு வழித்தடத்தில் சென்றுகொண்டிருக்கின்றோமா என்பதுதான் நாம் நம்மை நோக்கிக் கேட்கவேண்டியது.

தமக்குப் பிடித்தவற்றுக்காய், தாம் வாழ விரும்பும் வாழ்க்கைக்காக, லௌகீக வாழ்வினைத் துறந்து போனவர்களின் மனோதிடத்தை இவ்வாறான பொழுதுகளில் வியப்பதுண்டு. ஏனெனில் விரும்பிய ஒன்றைச் செய்யத் தொடங்கும்போது எத்தனை விடயங்களை / பொறுப்புக்களை நினைத்து ஒவ்வொருவரும் கவலைப்படவேண்டியிருக்கின்றது. நமக்குள் இருந்து நம்மை அச்சுறுத்தும் நம் சொந்த பயங்களைத் தாண்டுவதென்பது அவ்வளவு எளிதானதல்ல.

என் எல்லா எண்ணங்களையும் கொஞ்சம் ஒதுக்கிவை என்று சொல்வதுபோல மழை விடாது பொழிந்து கொண்டிருந்தது. பசுமை எங்கும் விரிந்து கிடந்தது. பாக்குகளும் மிளகுகளும் ஈரப் பலாக்களும் தென்னைகளும் ஒன்றையொன்று மீறி செழிப்பாக வளர்ந்திருந்தன.



சரிவான நிலத்தில் கட்டப்பட்டிருந்த வீடே எனது தற்காலிகத் தங்குமிடம். அருகே சுனை பாய்ந்து கொண்டிருந்தது. அதிலிருந்தே குடிப்பதற்கு நீரும் குளிப்பதற்கான நீரும் வந்து கொண்டிருந்தன.

இரவும் பகலுமாய் எந்நேரமும் சுனையின் சத்தம் கேட்டுக்கொண்டிருந்த இடத்தில் இருந்து வானமளையும் மலையையும் காடுகளையும் பார்த்துக் கொண்டிருந்தேன். பெரும் கருங்கற்பாறைகள் வீட்டைச் சுற்றி இருந்தன. அவை 60-70 ஆண்டுகளுக்கு முன் மலையின் உச்சியிலிருந்து மண் சரிவின்போது உருண்ட வந்த பாறைகள் என்றனர். அப்போது இந்த அடிவாரத்தில் இருந்த சிலர் இறந்திருக்கின்றனர். ஒரு தாயும் பிள்ளையும் உணவூட்டிக் கொண்டபோது மரணித்திருக்கின்றனர் எனச் சொல்லப்பட்டது. எனக்கு அது பங்களாதேஷில் பூகம்பம் வந்தபோது கட்டியணைத்தபடி இறந்த ஒரு இணையை நினைவூட்டியது. எந்தக் கணத்திலும் மரணம் நம்மை ஆரத்தழுவும் என்று அறிந்தும் அறியாத பாவனைகளோடு இந்த இயற்கையை அடக்கியாள முடியுமென்று இன்னமும் நம்பும் பிடிவாதக்காரர்கள் நாம்.

நான் நின்ற வீட்டினர் தமிழும் சிங்களமும் கலந்த ஒரு பின்னணியுள்ள குடும்பம். பிள்ளைகள் சிங்களத்திலேயே படிக்கின்றார்கள், ஆனால், தமிழ் பேசுகின்றார்கள். அடுத்தடுத்த தலைமுறையில் அவர்கள் முற்றாக சிங்களவர்கள் ஆகிவிடுவார்கள் என நினைக்கின்றேன். அவர்கள் வேட்டையின் மரபை இன்னும் கைவிடாதவர்கள். இப்போதும் காட்டுப் பன்றியும் முள்ளம் பன்றியும் உடும்பும் பிடிக்க வேட்டைக்குத் துப்பாக்கியோடு போகின்றவர்கள்.

ஆங்கிலேயர் காலத்தில் தமிழகத்தின் தென்பகுதியில் இருந்து இவர்களின் கொள்ளுத் தாத்தா இந்த மலைப்பகுதிக்கு வந்திருக்கின்றார். தாந்தோன்றித்தனமாய் அலைந்தவர், எவ்வாறு எதன்பொருட்டு அவர் இலங்கையின் இந்தப் பகுதிக்கு வந்தாரென்று தெரியவில்லை. இந்த மலையில் முன்னொரு காலத்தில் தேயிலை / இறப்பர் தோட்டம் ஆங்கிலேயரினால் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அது எஸ்டேட் ஆக விரிந்தபோது பின்னாளில் பலநூற்றுக்கணக்கானோர் வந்துகுடியேறி யிருக்கின்றார்கள். இவர்களின் கொள்ளுத்தாத்தா ஆங்கிலேயரோடு வேட்டைக்குப் போகின்றவராகவும் வீடுகளை நிர்மாணிக்கின்றவராகவும் தொழிலாளிகளை வழிநடத்துபவராகவும் இருந்திருக்கின்றார். இவரின் கீழ் சில நூறுபேர் கட்டுமானத்தில் வேலை செய்தனர் என்றனர். எனவே, அவரின் பெயரில் இம்மலைகளில் மட்டுமில்லை, நகரத்திலும் நிலபுலங்கள் இருந்திருக்கின்றது. பின்னர் ஆங்கிலேயர் இந்த எஸ்டேட்டை கைவிடுகின்றனர்.

இங்கிருந்த தொழிலாளர்களும் வேறு வேறு இடங்களுக்குப் பின்னர் புலம்பெயர, இந்தக் குடும்பமும் அதன் வாரிசுகளும் மட்டும் இந்த மலையில் தங்கிவிட்டார்கள். இப்போது அவர்களின் நிலப்பரப்புகள் சுருங்கிவிட்டன. எவரெவரோ இவர்களின் நகரத்து நிலங்களை சுவீகரித்தும் விட்டார்கள். ஒருவகையில் வாழ்ந்து கெட்ட குடும்பம் என்று சொல்லலாமோ என்னவோ? ஆனால், அவர்களுக்கு இன்னமும் தாங்கள் இந்த மலைகளுக்கு உரியவர்கள் என்று கூறுவதிலும், வேட்டையின் நுட்பம் தெரிந்த பெரும் வேட்டைக்காரர்கள் என்பதிலும் ஒருவித கம்பீரமும் கர்வமும் இருக்கின்றது.

வெளியே கொஞ்ச தூரம் நடந்தாலே மலை அட்டைகள் எம்மையறியாமலே ஏறிவிடுகின்றன. நான் சப்பாத்துபோட்டு அருகில் இருந்த இடங்களுக்கு நடந்தபோது இரத்தம் உறிஞ்சும் அட்டைகள் என்னோடும் நேசம் கொண்டன. எப்போதும் கையில் உப்பு கலக்கப்பட்ட போத்தல்களோடு திரிய வேண்டியிருந்தது. உப்புக்கரைசலை ஊற்றினால் - நம்மால் பலன் பெற்றுவிட்டு, நீ யாரென்று பின்னாட்களில் கேட்டு முகஞ்சுழிக்கும் 'உத்தமர்'கள் போல - அட்டைகளும் சட்டென்று உடல் சுருங்கி நம்மைவிட்டு அகன்று விடுகின்றன.



அங்கே ஒரு பதின்மன் இருந்தான். சிங்களத்தில் படித்துக்கொண்டிருந்தாலும் தமிழ் மீதான ஆர்வத்தில் வீட்டுச் சுவரில் பாரதியார் கவிதையை எழுதி வைத்திருந்தான். அவனோடு பேசிக்கொண்டிருந்தேன். உரையாடல் எப்படி வளர்ந்ததோ தெரியாது என்னையறியாமல் என் பதின்மங்கள், காதல்கள், பயணங்கள் எனப் பகிரும்படியாக அந்த இரவு நீண்டது. அந்த மலையிலிருந்து இறங்கி நீண்டதூரம் நடந்து படிக்கப்போகும் அவன் எனக்குப் பலரை நினைவுபடுத்தியிருக்கலாம். வெள்ளையுடையுடன் சேற்றில் / மழைநீரில் அசுத்தமாகாது, அவ்வளவு தூரம் அவன் நடந்துபோவதே எனக்கு வியப்புத்தான். ஆகவே, அவனிடம், நீ கற்கின்ற இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி உன் வாழ்க்கையை, உன் மூதாதையரின் கதையை எப்படியேனும் பதிவு செய் என்றேன். ஏனெனில் எல்லோருக்கும் இது வாய்ப்பதில்லை. நான் இங்கே தங்கி நின்ற சில நாட்களிலே எவ்வளவை அவதானிக்கின்றேன். நீ இங்கே வாழ்ந்து கொண்டிருப்பவன். இந்த இயற்கையோடு உள்ளூறைந்து கிடப்பவன். நான் அந்நியன். எதைச் சொன்னாலும் எழுதினாலும் நகரத்துக்காரனின் ஆதிக்கம் இருக்கும், உனக்கது அப்படியல்ல என்று எதையெதையோ எல்லாம் அவனிடம் பேசிக்கொண்டிருந்தேன். அடுத்த நாள் மாலையில் அவன் தங்கை முறையானவள் வந்து வெசாக் கூடுகள் செய்து தரச் சொல்லி இவனிடம் கேட்டாள். இவன் கொஞ்சம் சலித்தபடி மூங்கில்கள் வெட்ட மலையேறிப் போனான். நாளை ஒளியேறும் இவர்களின் பரிசுத்தமான வெசாக்கூடுகளிலே எனக்கான புத்தர் உள்ளூறைந்து இருக்கின்றான்.

அந்த மாலை வளர்ந்தோருக்கான இரவு. நான் வாங்கிப் போன செம்மது அவர்களுக்கு கேலிக்குரிய குடிவகை. நாமெல்லாம் வேட்டையில் மட்டுமில்லை, குடியிலும் பெருங்குடியர்கள், இதெல்லாம் உதவாது என்றார்கள். எனவே, அரக் (சாராயம்) முழுப்போத்தலை உள்ளூர் வாசத்துடன் இறக்கினோம். மலையின் உச்சியில் ஒரு நாடோடி, கித்துள் கள் கொண்டுவர, மதியம் மலையேறிச் சென்று அதை அருந்தி மாலை சூரியன் மறையும்வரை மலைச்சிகரத்தில் போதையோடு கழித்த நாட்கள் பற்றி கதையதையாக அவர்கள் சொன்னார்கள். இது வெறும் மலை மட்டுமில்லை எதுவும் எளிதாக விளையும் பொன்னான பூமியுங்கூட. அங்கே சிவமூலிகைகளும் தேடினால் கிடைக்கும். அன்னமாய் மேலுலகையும் பன்றியாய் கீழுலகையும் கடுமையாய்த் தேடியவர்க்கு அருள்பாலித்தவன் நமது சிவன். தேடலைப் பொறுத்துக் கிடைக்கும் மூலிகை, அந்த மாலைக் குளிருக்கு வெம்மையின் உச்சம் ஏற்றுபவை.

இந்த மனிதர்களுக்கு இந்த மலையே வாழ்வு. அதற்குள் மிளகும் பாக்கும் ஈரப்பலாக்காய்களும் வாழைகளும் அவக்காடோக்களும் போதுமென்றளவுக்கு விளைகின்றன. வேட்டைக்காலங்களில் நல்ல சுவையான இறைச்சிகள் கிடைக்கின்றன. என்ன வேண்டும் இந்த வாழ்வுக்கு என்ற அலட்சியத்தோடும் கம்பீரத்தோடும் திரியும்

வாழ்வு அவர்களுக்கு. என்றாலும் அவர்களுக்குள்ளும் பிரச்சினைகள் இருக்கின்றன. அதை அலசி ஆராய்வதால் என்ன பயன்? நாம் அங்கு போய் வாழவா போகின்றோம்? எந்த மனிதர்கள்தான் சிக்கல்கள் இல்லாது இருக்கின்றனர்.

எனக்கு அந்த மலைக்கும் காட்டுக்கும் இடையில் குடில் அமைத்து வாழும் ஆசை எழுந்தது. ஆனால், என்னால் ஒருநாள் கூட தனித்து அங்கே வாழமுடியாது என்பதும் புரிந்தது. ஐயோ, இந்த சுனைநீர் இவ்வளவு குளிருகின்றதே நீராட வேறு வழியிருக்கா என்று யோசிக்கும் சாதாரண ஒருவன் நான். இவர்கள் இந்த நிலப்பரப்பில் தகவமைத்துக் கொள்ள எவ்வளவு காலம் ஆகியிருக்கும். அது வாழையடி வாழையாக வாழ்ந்து வந்த பரம்பரைக்கு, இந்த மலை எங்கள் மலையென்று கொடுத்த மாபெரும் வைராக்கியம் அல்லவா? ஒரு நேரச் சாப்பாடு இல்லையென்றால் கனிதரும் மரங்களைத் தேடியோ அல்லது துப்பாக்கி தூக்கிக் கொண்டு வேட்டையாடப் போகும் அவர்களைப் போன்ற சாகசக்காரனோ அல்ல நான்.

நான் அந்த இயற்கைக்குள் இருந்து வாசித்து எழுத விரும்புகின்றவன். என் தனிமையை நீ கெடுக்கிறாய் எனச் செல்லமாய்க் கோபித்தபடி என் காதலியின் கதகதப்பான அரவணைப்புக்குள் உறங்க விரும்புகின்ற சாதாரணமானவன். எனவே, இந்த மலையில் என்றென்றும் வாழும் என் கனவு வெறும் பகற்கனவே. ஆனாலும் அடிக்கடி இவ்வாறான மலைகளையும் காடுகளையும் தேடிப் போகவே என்றும் பிரியப்படுவேன்.

மலைகளினதும் காடுகளினதும் கதைகளை, மனிதர்கள் தம் இரத்தமும் வியர்வையும் கலந்து சொல்கின்றபோதே அவை மாமலைகளாகவும் பெருங்காடாகவும் மாறுகின்றன.

மாமலைகளையும் பெருங்காடுகளையும் கடந்து செல்லுமொருவன், தன் மூதாதையர் சுதந்திரமாய் உலாவித் திரிந்த குறிஞ்சித் திணையினதும் முல்லைத் திணையினதும் ஒருதுளி வாழ்வையேனும் அகத்தில் தரிசிக்கவே செய்வான்.

அதுவே இயற்கை அவனுக்கு அளிக்கும் மாபெரும் கொடை!

## திருக்கோணமலை: நண்பகல் நேரத்து மயக்கம்

திருக்கோணமலையில் நின்றபோது ‘விடுதலை’ படத்தை முதல் காட்சியிலே பார்க்க விருப்பம் ஏற்பட்டது. ‘பத்து தல’, ‘விடுதலை’ என்று நிறையத் தலைகள் ஒரே நேரத்தில் வெளிவந்ததால் எந்தக் காட்சி எப்போது ஓடுகின்றது என இந்தத் தறுதலைக்கும் குழப்பம் வந்தது. 5 நிமிட நடையில் அருகில் நெல்சன் தியேட்டர் இருக்க, நேரேயே போய் கேட்கலாமென காலை 10.30 மணிக் காட்சிக்குப் புறப்பட்டேன்.

இதற்குள் காளிகோயில் திருவிழாவிற்கு வரும் அடியார்க்கு எங்கள் சித்தி குடும்பம் தினம் மோர் ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தது. மோரைக் கரைத்தல், வெங்காயம், மிளகாய் வெட்டிக் கலத்தெனும் கடின வேலைகளையெல்லாம் மற்றவர்கள் செய்தார்கள். நான் மோரை அள்ளி ஊற்றும் திருபணியை மட்டும் செய்து பிறருக்கு கடும் தன்னார்வலர் போலப் படங்காட்டினேன். கூடவே உதவிக்கு இரண்டு பெண்கள் இருந்ததால், வெயில் சுட்டெரித்தாலும் மனது மோரைப் போல் குளிர்மையாகஇருந்தது. அம்மாளாச்சி, தன் அணுக்கத் தொண்டனுக்குக் கொடுக்கும் அருள் என்பது இதுதானோ?

அன்று காலை தொடங்கிய மோர் அள்ளியூற்றும் அருட்பணியை முடிக்கவே பத்தரைக்கு மேலே ஆகிவிட்டது.

இதற்கிடையில் ஒருத்தன் வெளிவீதியில் பிரதட்டை அடியடித்த மணல் உடலோடு வந்து அடிக்கடி மோர் வாங்கிக் குடித்தான். நான் என்ன ஓர் பக்தி, உடலைக் கூடக் கழுவாமல் மணலோடு வந்து தாகத்தோடு மோர் வாங்கிக் குடிக்கின்றானே என வியந்தேன். அருகில் இருந்த பெண்களோ, ‘இவன் மோருக்காகவே இப்படி உடம்பில் சும்மா மணலை அள்ளிப்பூசிக்கொண்டு வந்திருக்கின்றான்’ என்று என் வியத்தலை வார்த்தைகளால் அடித்து நொறுக்கினார்கள்.

உண்மையாக உழைப்பவர்கள் அதன் பெருமிதத்தைக் காட்ட, வியர்வைத் துளிகளைக் காட்டியபடி எங்கும் செல்லாம். என்னைப் போன்ற மோர் ஊற்றியே முதுகுவலி கண்டவர்கள் அப்படி வியர்வையுடன் வெளியே செல்வது உழைப்பவர்க்கே அவமானம்.

ஆகவே, ஓடிப்போய் குளித்துவிட்டு நெல்சன் தியேட்டருக்குப் போக 10.45 ஆகிவிட்டது. இவ்வளவு பெரிய தியேட்டரைக் கட்டிவிட்டு உள்ளே போகவும் ரிக்கெட் எடுக்கவும் ஒரு சுரங்கப்பாதை போல ஒற்றை இருட்டுப் பாதை வைத்திருந்தது தெரியாமல், ‘எங்கையடா என்ரன்ஸு’ என்று நான் குழப்பிப் போனேன்.

அப்படி தியேட்டர் தெருவுக்குள் திரும்பும்போது ஒரு இளைஞனைக் கண்டேன். சுட்டெரிக்கும் வெயிலுக்குள் மேலாடை இல்லாது குறுக்கும் மறுக்குமாகப் பெருந் தெருவில் திரிந்து கொண்டிருந்தார். ஆள் திடகாத்திரமாகவும் நல்ல உயரமாகவும் இருந்தார். ஏதும் வம்புக்குப் போனால் நமது ‘பத்துதல’ சிம்பு போன்ற பத்துப் பேரையே அடித்துத் துவைக்கக் கூடிய ‘ஆஜானுபாவராக’த் தெரிந்தார். நான்



ஒருமாதிரி இருண்ட பாதையைக் கண்டுபிடித்து நெல்சன் தியேட்டக்காரர்களிடம் 'விடுதலை'க்கு ரிக்கெட் கேட்க, இப்போது 'பத்துதல' தான் இரண்டரைக்குத்தான் 'விடுதலை' என்றனர்.

உடனே காளி கோயிலடிக்குத் திரும்பிப்போகவும் வெட்கமாயிருந்தது. 'விடுதலை'க்கு விடுவிடுவென்று மோர் ஊற்றிப் போனவர், விரைவிலே விடுதலையாகி அந்த 'அடியடித்த மணல்மேனியன்' போல வந்துவிட்டாரென்று இந்தப் பெண்களே என்னை நக்கலடிப்பார்கள். எனவே, தியேட்டருக்கு வெளியே வந்து ஒரு பெருமரத்தடியில் இருந்து தெருவை வேடிக்கை பார்க்கத் தொடங்கினேன்.

இப்போதும் அந்த இளைஞர் அவ்வளவு உக்கிர வெயிலுக்குள் எதையோ தன்பாட்டில் பேசியபடி, குறுக்கும் மறுக்குமாகத் திரிந்து கொண்டிருந்தார். அவரோடு வந்தவர் என அறிமுகப்படுத்திக் கொண்ட ஒருவர் என்னோடு பேசத் தொடங்கினார். தானும் அந்த திடகாத்திர இளைஞரும் படம் பார்க்க வந்தோம். ஆனால், தியேட்டருக்குள் போனவுடன் படம் பார்க்கப் பிடிக்கவில்லை என்று அவர் வெளியே வந்துவிட்டார். அது கூட பரவாயில்லை. இப்போது மேற்சட்டையைக் கழற்றிவிட்டு இப்படி ரோட்டில் எழுந்தமானமாய்த்திரிகிறார், என்ன செய்வது என்றும் தெரியவில்லை என்று கவலையுடன் சொன்னார்.

அந்த திடகாத்திர இளைஞரின் பெற்றோர் இவரோடு படம் பார்க்க அந்த இளைஞனை ஓட்டோவில் அனுப்பத்தான், இப்படி அவர் மேற்சட்டையைக் கழற்றிவிட்டு அங்கும் இங்குமாக அலையத் தொடங்கியிருக்கிறார். எனக்கு என்ன சொல்வதென்றும் தெரியவில்லை. எப்படியெனினும் இவரை அவரின் பெற்றோரிடம் கொண்டுபோய் ஒப்படைத்தால்தான் தனக்கு நிம்மதி என்றும், அவர்களுக்குத்தான் இப்போது தொலைபேசி யிருக்கின்றேன் என்றார் இவர்.

அவர் வீட்டிலிருந்து வரும்போதும் ஏதேனும் இப்படி வித்தியாசமான சமிக்ஞைகள் காட்டினாரா எனக் கேட்டேன். எனக்கு அவரைப் பற்றி அவ்வளவு தெரியாது, அந்த இளைஞன் கனடாவிலிருந்து வந்திருக்கின்றார் எனச் சொன்னார். கனடாவிலிருந்து வருகின்றவர்கள் எல்லோருமே என்னை மாதிரி ஒரு மார்க்கமாகவே இருக்கின்றார்கள் என்பதால் நானும் கனடாதான் என்று இவரிடம் சொல்லாமல் தவிர்த்தேன்.

ஆனால், ஓட்டோவில் வரும்போது அல்லாவைப் பற்றி எதிர்மறையாகக் கதைத்துக் கொண்டிருந்தார். "நீங்களே சொல்லுங்கள், அல்லாஹ்தானே இந்த உலகத்தைப் படைத்தார், ஆனால், இவர் அதை மறுத்து அப்படியில்லை என்று சொல்லிக் கொண்டுவந்தார்" என்றார். நான் இந்த விவாதத்திற்குள் போக விரும்பாது, "அவரவர்க்கு அவரவர் நம்பிக்கை, அதன் வழி ஒவ்வொருவரையும் விட்டுவிட்டால் நமக்கும் நிம்மதி" என்று சொல்லி விட்டு, அந்த இளைஞரை வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு செல்லும் வழியைப் பார்ப்போம் என்றேன்.

சிலவேளை இப்படி அந்த இளைஞர் தன்போக்கில் தெருவில் திரிய, பொலிஸ் ஏதாவது வந்து கேட்டால் என்ன சொல்வது என்பது பற்றித்தான் நாங்கள் இரண்டுபேரும் பயந்தோம். கொஞ்சம் பதற்றமாகவும் இருக்கத்தான் செய்தது. நல்லவேளையாக கொஞ்ச நேரத்தில் அந்த இளைஞரின் வாப்பா யாரோ ஒருவரை ஆட்டோவில் அனுப்ப, இளைஞர் மிக நிதானமாக தியேட்டருக்குப் பக்கத்தில் இருந்த மரத்தில் கழற்றியெறிந்த ஷேர்ட்டை எடுத்து அணிந்துகொண்டு, எதுவுமே நடக்காததுபோல ஓட்டோவிற்குள் ஏறி எனக்குக் கையசைத்தார். நானும் அவர்களிடம் இருந்து விடைபெற்று காளி கோயிலடியை நோக்கி நடக்கத் தொடங்கினேன்.

எல்லாமே நடந்தன, ஆனால், எதுவுமே நிகழவில்லை போல அந்தப் பொழுதை, காலமென்ற கருந்துளை கடந்தகாலமாய் உட்செரித்துப் போயிற்று. வாழ்வில் சில சந்தர்ப்பங்களில் நாமேன் நமக்குத் துளியும் சம்பந்தமில்லாத விடயங்களுக்குச் சாட்சியமாக இருக்கின்றோமென்பதும் புரிவதில்லை.

"இளங்கோ" <elanko25@gmail.com>

# எனக்கும் உனக்குமான தொலைவு

## ஹமீம் முஸ்தபா



நான் சோறு என்கிறேன்
நீ சாதம் என்கிறாய்
நான் நேர்ச்சைச்சோறு என்கிறேன்
நீ பிரசாதம் என்கிறாய்

ஒன்றுக்கும் மேலான
ஆயிரம் ஆண்டுகளைச் சுமந்து
பயணிக்கிறது சோறு

வெள்ளைச்சோறு, பொங்கச்சோறு
தேங்காய்ச்சோறு, மஞ்சைச்சோறு
பாற்சோறு, நெய்ச்சோறு
நேர்ச்சைச்சோறு, மருந்துச்சோறு
உளுந்தஞ்சோறு, மண்சோறு
கட்டுச்சோறு, கூட்டாஞ்சோறு
எனக்கு

தயிர் சாதம், சாம்பார் சாதம்
லெமன் சாதம், தக்காளி சாதம்
தேங்காய் சாதம், பருப்பு சாதம்
உனக்கு

எம் அடுக்களையில்
சோறு ஆக்குவார்கள்.
சோறு வடிப்பார்கள்
சோறு வைப்பார்கள்
சோறு பொங்குவார்கள்
மூளையே எனக்கு தலைச்சோறுதான்
உனக்கது இல்லை

திட்டுவது என்றாலும்
சோத்துமாடன்தான்
சோற்றுக்குள் சொக்கனைக்
கண்ட மரபு இது
உனக்கு மாடனும் இல்லை
சொக்கனும் இல்லை சாத்தானும் இல்லை

‘சோழநாடு சோறுடைத்து’
என்பது கவிசொல்
‘வேழம் உடைத்து’ என்று
புகழப்பட்ட சேரத்திலும்
இன்னார் இனியர் பாராத
பெருஞ்சோற்று உதியன் வேரொன்று எமக்குண்டு
வேரில்லை உனக்கு என்பது வரலாறு

சோற்றுக்கும் சாதத்திற்கும்
நடுவிலிருக்கும் இடைவெளிதான்
எனக்கும் உனக்குமான தொலைவு

ஹமீம் முஸ்தபா <thuckalayhameem@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

